# சிறந்த வாழ்வுக்குச் சில யோசனைகள்



த. கோவேந்தன்

# சிறந்த வாழ்வுக்குச்
# சில யோசனைகள்

த கோவேந்தன்

அப்பல்லோ வெளியீடு
நந்தம்பாக்கம்
குன்றத்தூர் வழி
600 069

# உலகண்ணலுக்கு இந்நூல்

எண்ணும்நல் எண்ணம் எல்லாம்
இலக்கியம் ஆக்க வேண்டி
உண்ணும்நல் உணவும், வாழும்
உறைவிடம் தந்து, தன்றன்
கண் எனக் காக்கும் வள்ளல்
கார்நிகர் உலகண்ணல்தன்
வண்புகழ் சிறக்க இந்நூல்
வழங்கினன்; த. கோவேந்தன்.

---

* உலகணணல—டாகடா சகதரடசகன டி.லிட

# வாழ்வின் குறிக்கோள்

## டாக்டர் சதக்ரட்சகன் டி.லிட்.

அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் என்றார் அவ்வையார். ஆம், அரிய மானிடராய்ப் பிறந்துள்ளோம். ஆனால் எத்துணை பேர் மானிடராய் வாழ்கின்றனர்? மானுட வாழ்வின் குறிக்கோளை அறிந்துள்ளனர்? வாழ்வுதான மிகமிக அருமையானது, மாண்புடையது, மேன்மையுடையது. ஆம் அது மகிழ்ச்சியையும் இன்பத்தையும் நம்பிக்கைகளையும் தருவது.

செடி, கொடி, மரக்கிளைகளின் தழைப்புக்கும் செழிப்புக்கும் அழகுக்கும் வேர்கள்தாம் ஆதாரம். அதைப்போல் வாழ்க்கைக்கும் ஆதாரம் அன்பும் உழைப்பும்தாம். அன்பு நெஞ்சிலே வேர் விட்டிருந்தால் வாழ்க்கை நீடிக்கும். வாழ்க்கையோ மனிதனுக்கு ஒரு தடவைதான் கிடைக்கிறது. நீ விழுந்துவிட்டால் சட்டென்று எழுந்துவிடு. புழுதியைத் தட்டி உதறிப் போக்கிவிட்டு மேலே நட.

இதனை நான் சொல்வதினும் நாம் வாழும் உலகம் நாள்தோறும் சொல்லித் தருகிறது. நமது முன்னோர் களும் தமது பட்டறிவுப் பாடங்களை ஏட்டிலே பதித்து வைத்துள்ளனர். வாழும் வழியினைக் காட்டி யுள்ளனர். அதன் சாறம் வாழ்க்கையின் உயர்வும் இன்பமும் உன் அகத்தேதான் வகுக்கப்படுகின்றது என்பதாகும்.

மேலை நாட்டு இலக்கியங்களினும் கீழை நாட்டு இலக்கியங்கள் அறம்-பொருள் இன்பத்தை மிகுதியாகப் போதிப்பன. அப்படி இருந்தும் வாழ்க்கை நிலையிலும் தரத்திலும்-வளமையிலும் வளரா நிலையில் இந்தியத் தமிழகம் இருப்பது வருந்தத் தக்கதாகும். அதுவும், காரல்மார்க்சின் நூலினும் மேலான ஒரு திருக்குறள் நூல் நமக்கு வழிகாட்டியாக இருந்தும் நாம் வாழ்வில் சிறக்காதது பலரை வருத்தியுள்ளது. எனவேதான் பலர் தனி மனித வாழ்வும், சமூகமும் வளரப் பல நூல் களைத் தொடர்ந்து எழுதித் தருகின்றனர். ஆனால் அவை பெரும்பாலும் தம் தம் பட்டறிவால்-நுகர்வறி வால்-அனுபவத்தால் எழுதப்பட்டவை அல்ல. அவை பெரிதும் ஆங்கில நூல்களின் தழுவல்கள்தாம். தமிழ் நூல்களைக் கற்றும் வாழ்ந்தும் பெற்ற பாடங்களைத் தந்தவர்கள் விரல்விட்டு எண்ணிவிடலாம்.

அன்பு, அறிவு, உழைப்பு, ஒழுக்கம் இவற்றுள் அடங்கியதே முழுமையான வாழ்வு என்பதைத் தம் முடைய ஐம்பதாண்டு கால உலக வாழ்வனுபவத்தையும்

இலக்கியங்களில் பெற்ற அறிவையும் நன்கு செரிமானம் செய்து அண்ணன் த. கோவேந்தன தந்துள்ள நூலே 'சிறந்த வாழ்வுக்குச் சில யோசனைகள்' என்னும் நூல்.

வாழ்க்கை எவ்வளவு எளிமையானதோ-தெளிவானதோ அவவளவு எளிய-தெளிந்த நடையில் இந் நூல எழுதப்பட்டுள்ளது. அண்ணன தம் மொழிப் புலமையை இங்கே காட்டவில்லை. அடிப்படை அறிவுடையவரும ஆழ்ந்து எண்ணிப் படிக்கத்தக்க வகையில எழுதியுளளார்.

நூலாசிரியா பாவேந்தர் பாரதிதாசனுடன பழகியதாலும், அவர் எழுத்துகளில ஆழங்கால் படடதாலும் உவமைகளும-உருவகஙகளும மின்னலின் பின்னலாக ஆஙகாங்கே ஒளிர்கின்றன.

நேருக்கு நேர் நினறு பேசுவதுபோல் நம் நெஞ்சுக்குள் சொற்கள் சிறகடித்துப் பறக்கின்றன. உண்மையில் ஊனறி அனபில உறவாடத தெரியாத நமக்கு உறவாண்மையை மேம்படச் செயகிறார் ஆசிரியர்.

பட்டறிவினால பெறற பாடஙகள் பக்கங்கள் தோறும் கொட்டிக் கிடக்கின்றன. உண்மைகள் ஒளிப் படங்களாக மனக் கண்முன்னே விரிகின்றன. எண்ணிய எண்ணியாங்கு எய்தத் திண்ணியராய்த்

தெளிந்தவராய் விழிப்புணர்வுடையவராய் நம்மை-நம் உள்ளுணர்வைத் தட்டி எழுப்புகின்றன இந்நூல்.

**ஒருபொழுதும் வாழ்வதறியார்,**
**கருதுப—கோடியும்**
**அல்ல பல!**

என்ற குறளுக்கு ஏற்பவே நம்மில் பலரும் வாழ்கிறோம். வாழ்க்கையில் கற்றுக்கொள்ள வேண்டிய இன்றியமை யாத கூறு எப்படி வாழவேண்டும் என்பதே. அவ்வாறு வாழவேண்டிய வழிவகைகள், நெறிமுறைகள் பற்பல அல்ல, சிலவே. அவற்றைத் தொகுத்து வகுத்துத் தந்துள்ளார் அணணன் த. கோவேந்தன்.

பொதுவாக இந்நூல் உலகில் நலவாழ்வு வாழ்ந்த வர்களின் சாறமும திருக்குறளின சாறமும் இணைந்து பிணைந்துள்ளது நாட்டுச் சேவல் காலை ஞாயிற்றின் வருகையை எப்படி எக்காளமிட்டுக் கூவி அறிவிக்குமோ அப்படியே வையததுள் வாழ்வாங்கு வாழ அழைக் கிறது இந்நூல. நாமும் வாழ்ந்து காட்டுவோமே.

# சிறந்த வாழ்வுக்குச் சில சிந்தனைகள்

## சீரிய சிந்தனை

நீயே நினைத்துப் பார்! மனிதனே! இங்கு நீ எங்கிருந்து வந்தாய்?

உனக்கு இருக்கும் ஆற்றலை எண்ணிப் பார். உன் தேவைகளுக்கும் உனக்கும் உள்ள தொடர்பைப் பற்றிச் சிந்தனை செய்.

உன் வாழ்க்கையில் நீ செயலாற்ற வேண்டிய கடமைகள் உனக்கே புலப்படும். அந்தக் கடமைகளை நிறைவேற்றுவதற்கான வழிமுறைகளும் உனக்கு விளங்கும்.

பேசுவதற்கு முன் நீ, என்ன பேசுகிறோம் என்பதை நன்கு எண்ணிப் பிறகே பேசு. எதையும் செய்வதற்கு முன் ஆய்ந்து செய். அவமதிப்பும், தலை இறக்கமும் உனக்கு ஏற்படாதிருக்க அதுவே வழி. நீ யாரிடமும் வருத்தப்படவோ, மன்னிப்புக்

கேட்கவோ தேவை ஏற்படாது. இந்தப் பிறவியில் நீ துன்பமடைய வேண்டியிருக்காது. ஏன், நீ எத்தனைப் பிறவி எடுத்தாலும் உனக்கு எந்தக் கவலையும் ஏற்படாது.

அறிவிலியாக இருப்பவன் நாவடக்கம் இல்லாதவன். தன் விருப்பப்படி எதை வேண்டு மானாலும் பேசுவான். அவனுடைய பேச்சு அவனுடைய முட்டாள் தன்மையையே வெளிப் படுத்தும்.

திடீர் என்று எதையும் செய்திடத் துணிபவன், விரைந்து விரைந்து ஓடி, வேலியைத் தாண்டி, பள்ளத்தில் விழுபவனுக்குச் சமமானவன். விளைவுகளைப் பற்றி எவன் ஒருவன் முன் கூட்டியே எண்ணாமல் செயல்படுகிறானோ அவன் சட்டத்திற்குப் பணிந்து விடை கூற நேரிடும்.

எனவே எதிலும், தீவிரச் சிந்தனை செய்த பின்னரே முடிவை மேற்கொள்ள வேண்டும்.

## அடக்கம்

மனிதனே! நீ யார் என்பதைத் தெரிந்து கொள்! நீ எல்லாம் அறிந்தவன் என்று நீயே நினைத்துக் கொள்ளாதே.

முதலில் நீ அறியாமையோடுதான் பிறவி எடுத்தாய் என்பதை மறந்து விடாதே. அதுமட்டு

மில்லை! எந்த நேரமும் நீயும் இறப்பைச் சந்திக்க வேண்டியவனே என்பதை மறக்காதே.

எளிய ஆடை எப்படி ஒரு பெண்ணை அழகு படுத்துகிறதோ, அதைப் போலவே எளிமையான நடத்தையும் அறிவிற்கு அழகு செய்திடும்.

அடக்கமுள்ளவன் பேச்சில் உண்மை ஒளி வீசும், தன்னம்பிக்கையை மிக அதிகப்படுத்தும். குற்றங்கள் எதிலும் நாட்டம் கொள்ளாது. அப்படிப்பட்டவன் நண்பர்களின் நல்ல அறிவுரைகளை ஏற்று நடப்பான். அதனால் பல நன்மைகளையும் பெறுவான்.

அடக்கம் உள்ளவன் தற்புகழ்ச்சி கொள்ளான். பாராட்டுகளை ஏற்று மயங்கிவிடான். தன்னைப் பற்றித் தானே முழுமையாக உணர்ந்து கொள்வான். எப்படி ஒரு முக்காடு பெண்ணுக்கு மேலும் அழகை உண்டாக்குகிறதோ அதைப்போல அவனுடைய ஒழுக்கம் அவனுக்கு நன்மை தரும்.

செருக்குப் படைத்தவனைப் பார். அவன் அணிந்துள்ள ஆரவார ஆடைகளைப் பார். அவன் பொது இடங்களில் நடந்து கொள்வதைக் கவனி. கண்ட பெண்களை எல்லாம் அவன் கவர்ந்திட கண்கள் உருட்டுவதைப் பார். ஏழைகளைக் கண்டால் அவன் ஏளனமாகப் பார்ப்பதைப் பார். தன் கீழ் உள்ளவர்களைப் புறக்கணித்துப் வாழ்பவர், இவனைவிட உயர்ந்தவர்கள் அவனுடைய செருக்கையும் சிரிப்பையும் கண்டு குற்றம் காண்பதைப் பார்.

பிறர் என்ன நினைக்கிறார்கள் என்பதை அவன் புறக்கணிப்பதைப் பார். தன் கருத்துதான் சரி என்று அவன் நினைப்பதைப் பார். தற்பெருமையும், தற்செருக்கும் கொண்டு எப்போதும் நடந்து கொள்வதைக் கவனி.

இறுதியில் அவன் மற்றவர்களின் பாராட்டுகளில் மயங்கி, அவர்களுக்கு இவன் இரையாவதையும் தெரிந்துகொள்.

## நடைமுறைப்படுத்துதல்

கடந்த காலம் மீண்டும் வராது; உன்னுடைய எதிர்காலமும் உறுதியானதில்லை; மறைந்த நாள்களை நினைத்து வருந்த வேண்டா. எதிர்காலம் பற்றியும் அதிக நம்பிக்கை கொள்ள வேண்டா. முயற்சியில் மட்டும் முனைப்பாய் இரு.

நீ இப்போது எப்படி நடந்து கொள்கிறாயோ அதைப் பொருத்துத்தான் உன் எதிர்காலமும் அமையும். எனவே இப்போது நடப்பதுதான் உனக்கு உறுதியான காலம். எதிர்காலத்தின் கருவில் இருப்பதுதான் உன் வருங்காலம். அது உனக்கு எப்படி அமையப் போகிறது என்பதை நீ அறிய முடியாது.

வருங்காலத்தில் அமையக்கூடியதெல்லாம் நீ இந்தக் காலத்தில் அமைத்துக் கொண்டதைப் பொருத்ததாகும். எனவே, இந்த நிகழ் காலத்திலேயே உன் எதிர்காலத்தை அமைத்துக் கொண்டு

விடு. இன்று நீ எப்படி வாழ்கின்றாயோ அதைப் பொருத்தே உன் வருங்காலம் அமையும். நீ எதைச் செய்ய வேண்டும் என்று முடிவு செய்கிறாயோ அதைத் தாமதமின்றி இப்போது செய்து விடு. காலையிலேயே செய்து விடக்கூடியதை மாலையில் செய்திடலாம் என்று தள்ளிப் போடாதே

சோம்பல் தொல்லையைத் தான் தரும். சோம்பல் தேவைகளை உண்டாக்கும். உழைப்பு மகிழ்ச்சியைத் தரும். கடும் உழைப்பே செல்வத்தைத் தரும். இல்லாமையைப் போக்கும் வெற்றியைத் தரும்; முன்னேற்றத்தைத் தரும். சோம்பலைத் தனக்கு எதிரி என்று கருதுபவனே அனைத்தையும் அடையக் கூடியவன். அவன் காலையில் எழுவான்; காலம் கடந்து உறங்குவான்; சிந்தித்துச் செயல்படுவான்; உடல் நலத்தைப் பாதுகாத்துக் கொள்வான்.

சோம்பித் திரிபவன் அவனுக்கே சுமையானவன். பொழுது போகவில்லையே எனத் தவிப்பான். அவன் காலத்தின் மதிப்பை உணராதவன். முகில் மறைவதுபோல அவன் வாழ்நாளும் மறைந்து விடும். அவன் இறந்த பிறகு அவனைப்பற்றி நினைக்க எதுவும் இருக்காது.

அவன் உடல் பிணியால் பீடிக்கப்படும்; நடமாடக் கூட ஆற்றலற்று அவன் சிந்தனை

இருளில் சூழ்ந்து, குழம்பிய நிலையில் என்ன செய்வது என்று ஏங்கிடுவான்.

நிலக்கடலையின் மேல் ஓட்டை உடைக்காமலே உண்ண விருப்பப்படுவான். அப்படிப் பட்டவனின் வீடு ஒழுங்காக இருக்காது. குடும்பத்தினர் கிளர்ச்சியிலீடுபடுவார்கள்; அவன் அழிவை நோக்கித்தான் செல்ல நேரிடும். அழிவும் புலப்படும்; அவன் காதுகளில் அந்தச் சேதி ஒலிக்கும். அதை உணர்ந்து அவன் தலையும் அசையும். அவனுக்குப் புயல் ஓட்டத்தில் அழிவு நெருங்கிவிடும். இறுதியில் மதிப்பைத் தாங்கிக் கொண்டு, வருத்தமும் வேதனையும் அடைந்து மறைந்து போவான்.

## போட்டியிட்டு முன்னேறு

புகழ் ஏணியில் உயரவேண்டும் என்று உன் உள்ளம் துடிப்பதானால் நீ பாராட்டுகளைக் கேட்டு மகிழ்; உன் செவிகள் விரும்புமானால், நீ எடுத்த பிறவியின் நிலையில் இருந்து உன்னை நீயே உயர்த்திக் கொள்ளப் பாடுபடு.

இன்று உயர வளர்ந்து, கிளைகளுடன் கூடிய மரம், ஒரு காலத்தில் மண்ணடியில் விதையாகத் தான் இருந்தது என்பதை உணர். எதையும் சிறப் பாகச் செய்திட முடிவு செய்; பிறரிடம் பொறாமை கொள்ளாதே. உன் திறமைகளை வளர்த்துக்

கொள்ளப் பாடுபடு. உன்னிடம் போட்டியிடுபவர்களைக் கூடாத முறைகளில் அழித்திட நினைக்காதே. அவர்களை நேர்மையான முறையில் வென்றிட உன்னை வளர்த்துக் கொள். நேர்மையே உனக்குப் புகழும், மகிழ்ச்சியையும், வெற்றியையும் தந்திடும்.

எதிரிகளின் அடக்குமுறைத் திட்டங்களை முறியடித்து தென்னை மரம்போல் உயர்ந்திடுவாய்; பறவை போல நீ வையத்தை வலம் வருவாய்; செங்கதிரின் புகழ்போல் உன் கண்கள் ஒளி பெற்றிடும்.

உலகப்புகழ் அடைந்தவர்களைப் பற்றி இரவில் சிந்தித்து நல்ல பாதையில் பகல் முழுக்கப் பாடுபடு. உலகம் இருக்கும் வரை உன் புகழ் நிலைத்திடும்.

ஆனால், பொறாமைக் குணம் படைத்தவனின் நெஞ்சம் வெறுக்கத் தக்கது என்பதை மறந்துவிடாதே. அப்படிபட்டவனுக்குப் பிறர் அடையும் புகழ்கூடத் தனக்குக் கேடு என்ற நினைப்பு வரும். அவன் நெஞ்சத்தில் பகையுணர்வு, பொறாமை எண்ணம் குடிகொண்டு, அவனை ஓய்வு பெறாத நிலையில் வாட்டி வதைக்கும். நல்லதற்கு அவன் மனத்தில் இடம் இருக்காது. தன்னைப் போலவே பிறரையும் நினைப்பான். உயர்ந்தவர்களைக் குறை கூறுவான்; பிறருடைய செயல்களை எப்போதும் குறை

கூறும் போக்கைக் கொள்வான். யாருக்கு என்ன தீங்கு செய்திடலாம் என்றே அவன் நினைப்பான். இறுதியில் அவன் தானே பின்னிக்கொண்ட வலையில் சிலந்திபோல மடிவான்.

## முன் அறிவு

நல்ல அறிவுரைகளைக் கேட்டு, நீ உன் மனத்தில் பதிய வைத்துக் கொள். நல்ல நெறிகள் உலகம் முழுவதும் காணப்படுகின்றன. நல்ல ஒழுக்க அறிவை மனத்தில் தேக்கி வைத்திரு. உன் வாழ்வில் முன்னேற முன் எச்சரிக்கையாக அனைத்துச் சிறந்த கருத்துகளையும் திரட்டி வைத்துக் கொள்.

நாவடக்கத்தைக் கொண்டிரு. உதடுகளுக்குக் காவல் அமைத்திடு. இல்லையேல் உன் பேச்சே உன் அமைதியைக் குலைத்துவிடும்.

நடமாட முடியாத நொண்டியை இகழ்பவன் தான் மேற்கொண்டு முன்னேற முடியாது தடுக்கப் படுவான். பிறரைக் குறை கூறுபவன், தன்னைப் பற்றிப் பிறர் கூறுவதைக் கேட்டு மனம் நோக நேரிடும்.

அதிகம் பேசுபவன் வருத்தம் தெரிவிக்க வேண்டிவரும். நம் அமைதியைக் காப்பதில்தான் பாதுகாப்பு அடைய முடியும்.

வாயாடி சமூகத்திற்கே தொல்லை தருபவன். அவன் பேசுவதைக் கேட்கக் காதுகள் மரக்கும்.

அவனுடைய உளறல் மொழிகள் யுரையாடுபவர்களுக்குச் சீற்றத்தை உண்டாக்கும்.

உன்னைப் பற்றி நீயே வெறும் தற்புகழ்ச்சி கொள்ளாதே. அது உனக்குப் பிறருடைய வெறுப்பைத்தான் தேடித்தரும். நீ பிறரைக் குறை கூறாதே. அது உனக்கு அல்லலாக முடியும்.

குறும்புப் பேச்சு நம் நட்பை முறிக்கும். நாவடக்கம் இல்லாதவன் தொல்லைகளைத் தானே தேடிக் கொள்வான்.

உன் நிலைக்கு ஏற்ற ஏந்துகளை அமைத்துக் கொள். உன் ஆற்றலுக்கு மீறிப் பணத்தைச் செல விட்டு எதையும் பெற்றிட நினைக்காதே. அதுவே துன்பத்திற்குப் பாதை அமைத்துக் கொண்டதாகி விடும். இளமையில் முன் எச்சரிக்கையுடனும், சிக்கனத்துடனும் வாழ்வதே, முதிய வயதில் நிறைவான வாழ்வைத் தரும். உன் வேலைகளில் அக்கறை செலுத்து. மற்றவற்றை நாடாளும் நல்லவர்களுக்கு விட்டுவிடு.

பொழுதுபோக்கிற்காகப் பணத்தை வீணாக வாரி இறைத்து விடாதே. அதனால் நீ பெறும் மகிழ்ச்சி இறுதியில் தடைபடும். செல்வனாகி விட்டதால் எதையும் காணத் தயங்காதே. சிக்கனத்தின் பெயரால் முறையான செலவுகளைத் தவிர்த்து விடாதே. வரை கடந்த தேவையை வளர்த்துக் கொள்பவன், ஒரு காலத்தில் இன்றி

யமையாத தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளவே இயலாது தவிப்பான்.

மற்றவர்களின் பட்டறிவுகளைக் கொண்டு நீ அறிவைக் கொள்முதல் செய்து கொள். உன்னிடம் உள்ள குற்றம் குறைகளைத் திருத்தி அமைத்துக் கொள்.

எவரையும் உடனே நம்பி விடாதே. ஆய்ந்து செய்திடு. காரணமின்றி எவரிடமும் நம்பிக்கை யின்மையைக் கைக் கொள்ளாதே.

ஒரு நேர்மையானவனின் நட்பு கிடைத்து விட்டால், அது உனக்குக் கிடைத்திட்ட புதையல் என்று மதித்திடு. அவன் ஒரு விலை மதிக்க முடியாத பொன் சுரங்கம்.

பணத்திற்காகப் பாடுபடுபவர்களிடம் தயவை எதிர்பார்க்கக் கூடாது. உன் பணம் தீரும்வரை அவர்களை நீ விலக்கிக் கொள்ள முடியாது.

நாளைக்கு வேண்டும் என்பதை இன்றே செல விட்டு விடாதே.

உனக்கு உறுதியாக வெற்றி கிடைக்கும் என்றோ, நல்லதேதான் கிட்டும் என்றோ முன் முடிவை மேற்கொண்டு விடாதே. இரவில் என்ன நேரும் என்பதைப் பகலில் மனிதன் ஊகிக்க இயலாது.

முட்டாள்களுக்கு நல்ல காலம் உண்டு. அறிவாளிகளுக்கும் தோல்வி ஏற்படுவதுண்டு.

முட்டாள்களுக்குத் தொடர்ந்து இன்பம் இருப்பதில்லை. அறிவாளிகளுக்கு எப்போதும் இன்பம் கிட்டாது போவதில்லை.

## உறுதி கொள்

உலகில் ஒவ்வொரு மனிதனும் இடர்கள், கேடுகள், இல்லாமை, வலி, தொல்லை, பிணி, காயம் போன்றவற்றைத்தான் எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது.

எனவே, நீ தொடக்கத்திலேயே மன உறுதி கொண்டுவிடுக. உனக்கு எது நேரிட்டாலும் அதைத் துணிவோடு எதிர்கொள்ள ஆயத்தமாகி விடு.

பாலைவனத்தில் பாடுபடும் ஒட்டகம் பசி, வேட்கை, வெயில் கொடுமையைத் தாங்கிக் கொண்டுதான் பயணம் செய்கிறது. எதற்கும் அது அஞ்சி மயக்கமடைவதில்லை. நீயும் ஒட்டகத்தைப் போல எதையும் நேர்கொள்ள உறுதியாக இரு! தாக்கிடும் அலைகளால் ஏதும் செய்திட இயலாது.

மலையின் மீதுள்ள மின்விளக்கைப் போலத் தலையை நிமிர்த்தி நட. நல்லது நடக்கும். நன்மைகள் அம்புகளைப் போலக் காலடியில் குவியும்.

அல்லல் வந்து விட்டதே என்று அஞ்சாதே. உன் நெஞ்சத்தில் குடிகொண்டுள்ள துணிவு

உன்னைக் காத்திடும். நீ பெற்றுள்ள அறிவு அல்லலை அண்ட விடாது.

மனிதனுக்கு ஏற்படக் கூடிய எந்தக் கேடு உனக்கு வந்தாலும் நீ போரிட்டு அந்தக் கேட்டைத் தவிர்த்துக் கொண்டு, வெற்றி காண்பாய்.

தொடர்ந்து கேடுகள் வந்தாலும் உன் அமைதி தான் ஓரளவிற்குக் குறையுமே தவிர, இறுதியில் நீ வெற்றி காண்பாய்.

பொறுமையற்ற அறிவும், முரட்டுத்தனமும் உனக்கு மானக்கேட்டைத் தேடித் தரும்.

வறுமை வரும்போது செயலற்றுக் கிடப்பவன் இழிவான செயல்கள் செய்திட தூண்டப்படுவான். ஊரார் பழிப்புக்கு ஆளானவன் உதைப்பட நேரும். காற்று வீசும்போது நாணல் அசைவதைப் போல, கேடுகள் வரும்போது மனிதன் நடுக்கம் கொள்வான்.

இக்கட்டான காலத்தில் மனிதன் எதைச் செய்வது, எப்படிச் செய்வது என்பது புரியாத நிலையில் தொல்லையடைகிறான். அவன் நெஞ்சத்தில் நம்பிக்கை அற்றுப் போகிறது.

## மன நிறைவு

மனிதா! மறந்து விடாதே!

எப்போதும் அழிவே இல்லாத இயற்கைதான் இந்த உலகத்தில் நீ எங்கிருந்து, என்ன செய்ய வேண்டும் என்பதைக் கணித்திருக்கிறது.

இயற்கைத் தாய் உன்னை நன்கு புரிந்து கொண்டவள். உன் நெஞ்சத்தின் துடிப்பை அறிந்தவள். உன் ஆரவாரத்தையும், தற்பெருமையும் என்ன என்பதை உணர்ந்திருப்பவள். உன் கோரிக்கைகளில் பலவற்றை நிறைவேற்றிட உதவி புரிபவள் அவள்.

அதே நேரத்தில் உன்னுடைய முறையான கோரிகைகளை ஏற்று நிறைவேற்றுபவளும் அவள் தான். நீ நேர்மையுடன் பாடுபட்டதற்கு, நல்ல பலனையும் தந்தவள் அவள்தான்.

இன்று நீ அமைதியற்று நுகரும் ஏமாற்றங்களுக்கும், தோல்விக்கும், துயரத்திற்கும் என்ன காரணம் என்பதை எண்ணிப்பார். எதனால் இந்த நிலை யாரால் இந்த நிலை எல்லாம் உன் தவறு தானே. உன் அகந்தைதானே காரணம். உன் அறிவைச் சீராகப் பயன்படுத்தாததின் விளைவு தானே இவை எல்லாம்.

இயற்கை உனக்கு அருள் புரியவில்லை என்று முணு முணுக்காதே. உன்னையே நீ முதலில் திருத்திக்கொள். பணத்தின் மீதோ அதிகாரத்தின் மீதோ பற்றுக் கொண்டு, எனக்கும் செல்வம் இருந்திருந்தால்—என் கையிலும் அதிகாரம் இருந்திருந்தால் நானும் மகிழ்ச்சியாக வாழ்ந்திருப்பேன் என்று

பிதற்றித் திரியாதே. அதை எல்லாம் அதிகமாகப் படைத்தவர்கள் பலர் பல வகையான தொல்லைகளுக்குத்தான் இலக்காகி இருக்கின்றனர் என்பதை மறந்து விடாதே.

பணக்காரனின் ஆசைகளும், அதனால் அவன் அடையும் அல்லலையும் ஏழை அறிய மாட்டான். அதிகாரத்தைக் கையில் வைத்திருப்பவர்கள் எப்படிப்பட்ட அதிர்ச்சிகளை அடைகிறார்கள் என்பதை ஏழை மக்கள் அறியமாட்டார்கள் அதனால்தான் தம் நிலையை நினைத்துப் பெரிதும் கவலை கொள்கிறார்கள்.

எனவே, செல்வர்களைப் பார்த்துப் பொறாமைப்படாதே. அவன் துன்பத்திற்கு என்ன காரணம் என்பதை உனக்குத் தெரிந்திருக்க வழியில்லை.

உள்ளதைக் கொண்டு மனநிறைவு கொள்வதே அறிவுடைமை. எவன் ஒருவன் செல்வத்தை மிகுதியாக்கிக் கொள்கிறானோ, அவனுக்குக் கவலைகளும் அதிகரிக்கும். எப்போதும் மனநிறைவோடு வாழ்வதில் தான் பெரும் செல்வம் அடங்கி இருக்கிறது. அப்படிப்பட்டவனுக்குத் துன்பம் உண்டாவதில்லை. நல்லவனாகவே வாழ்வதே மனிதர்களுக்கு இயற்கை வைத்துள்ள போட்டி. அதுவே, மகிழ்ச்சியடைவதற்கு வழி. மனநிறைவு கொண்டவனே அந்தப் போட்டியில் வெற்றியைக்

காண முடியும் என்றும் இன்பமாக வாழ்ந்திட மன நிறைவு கொள்வதில்தான் அடங்கி இருக்கிறது.

## தன்னடக்கம்

உன் உடல் நலத்தையும், இயற்கையின் அருளையும், புரிந்து கொண்டு நடப்பதில்தான் இன்பமான வாழ்வை அடைவதற்கு உள்ள குறுகிய வழியாகும். அந்த அருள் உனக்கும் இருக்கிறது. அதை நீ நல்ல முறையில் பாதுகாத்து வந்தால், உன் வாழ்நாள் முழுமை வரை மகிழ்ச்சி இருக்கும்.

துறவின் இன்பத்தில் அளவிற்கு மிஞ்சி மயங்கி விடாதே. அப்படிப்பட்ட மன மயக்கம் வரும்போது எச்சரிக்கையாக விலகிவிடு. உன்னை மயக்கிட வாய்ப்பு, சூழ்நிலை ஏற்படும்போது நமக்குத் தொல்லை நெருங்குகிறது என்பதைப் புரிந்துகொள். நீ எதையும் உறுதியாக இருந்து உன்னைப் பாதுகாத்துக் கொள்.

எதிரிகளின் மயக்கு மொழிகளைக் கேட்டு மயங்கி விட்டால் உன்னை நீயே ஏமாற்றிக் கொள்ள நேரிடும். உனக்கு இரண்டகம் செய்திடும் ஆற்றல்களைப் புரிந்து கொண்டு விலகி நில். நீ அதுதான் இன்பம் என்றும் தவறாக நினைத்துவிட்டால் உன்னை ஒரு பைத்தியக்கார னாக நீயே ஆக்கிக் கொள்ள வேண்டி இருக்கும்.

அதன் விளைவாகப் பல பிணிகளுக்கு ஆளாகி இறப்பைத் தழுவிக் கொள்ள நேரிடும்.

அப்படிப்பட்ட இன்பத்தைத் தேடி அலைந்தவர்கள், அதில் மயங்கி விட்டவர்கள் எந்த நிலையை அடைந்துள்ளனர் என்பதைப் பார்த்துப் புரிந்து கொள். அவர்கள் பெரும் எண்ணிக்கையில் இல்லை. அவர்கள் நோய் வாய்ப்பட்டு, உணர் விழந்து கிடப்பதையும் பார்த்துத் தெரிந்து கொள். அவர்கள் கண்ட இன்ப நலம் சிலமணி நேரம். ஆனால் அவர்கள் தாங்க முடியாத தவிப்பைத் தொடர்ந்து நுகர்ந்து வாழ்வில் வெறுப்பை அடைகிறார்கள். அந்த இன்பத்தைச் சுவைத்தவர்கள் பிற எந்த நல்லதையும் மனைவியிடம்கூட நுகர முடியாத நிலையை அடைகின்றனர். அந்த இன்பமே அவர்களைப் பழிவாங்கி விடுகிறது. இயற்கை அருளியதைத் தவறான முறையில் பயன்படுத்துபவர்களை இப்படித்தான் அவள் தண்டிக்கிறாள்.

ஆனால், நிலையான இன்ப உலகிற்கு மனிதனை அழைத்துச் செல்வது எது?

உடல் நலத்தைப் பாதுகாத்துக் கொண்டால் கன்னங்கள் செம்மலர் போல ஒளி கொண்டிருக்கும். நல்ல உடல் நலமே இன்பத்தை அளிப்பதாகும்.

அந்த உடல்நலம் என்பது உடற்பயிற்சியின் மகன். தன்னடக்கமே அது தரும் பரிசு. அந்த

உடல் நலத்தின் பிறங்கடைகள் துணிவையும் வீரத்தையும் ஒழுக்கத்தையும் தரக் கூடியவர்கள்.

உடல்நலம் கொண்டவர்களின் நரம்புகள், எலும்புகள் நன்றாக இருக்கும். நன்றாக உழைக்கக் கூடிய ஆற்றல் பெற்றிருப்பார்கள். அவர்கள் உணர்வுகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு, கெட்ட பழக்கங்களிலிருந்து தங்களைக் காத்துக் கொண்டு புகழ் அடைவார்கள். அவர்கள் நல் இன்பத் தையே அடைவார்கள். சிறிது நேரமே உறங்கு வார்கள். நல்ல உறக்கம் அவர்களுக்குப் புதிய தெம்பைத் தருகிறது.

அவர்கள் நல்ல உறுதி கொண்டவர்கள். கூர்மையான சிந்தனை ஆற்றல் பெற்றவர்கள். மருத்துவர்களுக்கு அவர்களிடம் வேலை இல்லை.

தீயவர்களின் நட்பின் காரணமாகவே அவர் களுக்குத் தீமை உண்டாகக் கூடும். அவர்களின் இரண்டகச் செயலால் மட்டுமே இவர்களின் உடல் நலத்திற்கு இன்னல் உண்டாகக்கூடும்.

அவர்களின் உடல் நலத்தையும் வலிவையும் அழகையும், நடத்தையும் கண்டு காமவல்லி மகிழ் கிறாள். அவள் அணியும் ஆடைகள் கவர்ச்சி யானவை. அவளின் கண்களோ ஈர்ப்பானவை. அவளின் பார்வை காதலுக்கு விடும் தூதுகள். அவளின் ஆசை மொழிகள் மயக்கிடும் ஆற்றல் கொண்டவை. ஆகவே நீ எச்சரிக்கையாக இரு.

சி—2

மயங்கிவிடாதே. ஆர்வ மொழிகளுக்குச் செவி மடுக்காதே. அவளின் கண்கள் வலைவீசி விட்டால் நீ அடிமையாகி விடுவாய்.

உனக்கு மானக்கேடு ஏற்படும்; பிணிக்குப் பலியாகி விடுவாய். நடந்ததை எல்லாம் நினைத்து வருந்தவேண்டி இருக்கும்.

ஆரவாரப் பெருவாழ்வு உன் உடல் உறுப்பு களைக் குறைத்து, உடல் நலத்தைப் பாதித்து, உன் வாழ்நாள்களைச் சுருக்கிவிடும். பல துன்பத்தை அடைவாய். உனக்கு யாரும் ஆறுதலாக இருக்க மாட்டார்கள்.

## நம்பிக்கையும்—அச்சமும்

நம்பிக்கையூட்டும் உறுதி மொழிகள் மலர்ந்த செம்மலர்களைப் போல இனிமையாக இருக்கும். ஆனால் அந்தச் செம்மலர்கள் அச்சம் எனும் முட் கிளையில் பிணைந்துள்ளன.

நம்பிக்கையில் மயங்கிவிடாதே. அச்சத்தின் காரணமாகத் தயக்கம் அடைந்து விடாதே. எதைச் செய்வது முறையோ அதைச் செய்யத் தயங்காதே. வாழ்க்கையில் குறுக்கிடும் எல்லாச் செயல்களிலும் ஒரே முறையில் தெளிவாக அணுகிச் செயல்படு.

நல்லவர்களுக்கு இறப்பு கூட அச்சமடையச் செய்யாது.

நீ எதைச் செய்வதானாலும் அதில் அறமுறை இருக்க வேண்டும். உன் உழைப்பு அந்த அடிப் படையில் அமையட்டும். வெற்றிக்காக அலைவதிலேயே நீ அதிக ஆர்வம் கொண்டால் நீ தோல்வியைத்தான் நேர்காண நேரிடும்.

தேவையற்ற அச்சம் கொள்ளாதே. எப்போதும் மனச் சோர்வு கொள்ளாதே. வெறும் கற்பனை யிலேயே காலத்தைக் கழிக்காதே.

அச்சத்தினால் ஏற்படுவதே இழப்புதான். தன்னம்பிக்கையுடன் செயல்படுவதன் மூலமே நல்ல பயனை நீ அடைய முடியும். நெருப்புக் கோழி மணலில் தன் தலையை மட்டும் புதைத்துக் கொண்டு உடல் முழுவதையும் வெளியே காட்டி விடுகிறது. அதுபோலவே ஒரு கோழையின் அச்சமும், அவனை இடர்பாட்டிற்குக் காட்டிக் கொடுத்து விடுகிறது.

நம்மால் வெல்ல இயலாது என்று தன் வல்லமையில் நம்பிக்கையின்மை கொள்பவன், தோல்வியை அடைவான். அதே நேரத்தில், தன் ஆற்றலில் முழு நம்பிக்கை கொண்டவன், எந்த வகையான தொல்லைகள், இக்கட்டுகள் நேர்ந் தாலும் அவற்றைக் கடந்து வெற்றியை அடை வான்.

தற்புகழ்ச்சி நிரம்பிய நம்பிக்கை, முட்டாள் களின் நெஞ்சத்தை மகிழ்விக்கும். அறிவாளி வீணான ஆசைகளுக்கு இடமளிக்க மாட்டான்.

நேர்மையின் அடிப்படையில் உன் ஆசைகள் அமையட்டும். நடைமுறைக்குச் சரிப்படாத ஆசைகளைக் கொள்ளாதே. எதையும் சிந்தித்துத் தன் ஆற்றலுக்கு ஏற்றதாக ஆசைகளைக கட்டுப் படுத்திக் கொள். அதுவே வெற்றிக்கு வழிகாட்டி. நீ ஏமாற்றமடையவோ, சலிப்புக் கொள்ளவோ தேவை ஏற்படாது.

## மகிழ்ச்சியும்—துயரமும்

உன் வாழ்வில் மிகுதியான மகிழ்ச்சி கொள் ளாதே. அது உன் அறிவைக் கெடுத்துவிடும். துன்பமும் துயரமும் ஏற்படும்போது மனம் உடைந்து போகாதே. நாம் வாழும் இந்த உலகத்தில் அளவோடுதான் இன்பமும் துன்பமும் பகிர்ந்து தரப்படுகிறன.

அதோ அந்த நல் இன்பம் குடிகொண்ட வீட்டைப் பார். வெளிப்புறத்தில் அது எழிலோடு காட்சி தருகிறது. உள்ளிருந்து வெளிப்படும் கும்மாளமும் அதைக் காட்டுகிறது. வாயிலில் நிற்கும் இல்லத்து அரசி வருபவர்களை எல்லாம் ஆடிப்பாடிச் சிரித்து வரவேற்கிறாள். எல்லோ ரையும் உள்ளே சென்று இன்பங்களைச் சுவைக்கு மாறு அன்பு வேண்டுகோள் விடுக்கிறாள். அத்தனை இன்பமும் வேறு எங்கும் கிடைாகாது என்று பெருமையாகக் கூறுகிறாள்.

ஆனால், நீ சிந்தித்துத் தெளிவு பெறாமல் உள்ளே சென்று விடாதே. அந்த வீட்டிற்கு அடிக்கடி வந்து போகிறவர்களுடன் பழகாதே.

அவர்கள் மன மகிழ்ச்சியோடு இருப்பதாகத் தம்பட்டம் அடித்துக் கொள்வர். ஆனால், அவர் களின் செயல்கள் அறிவற்றவர் செயல்கள்; தவறான செயல்கள்; அவர்களின் போக்குக் கேட்டி லேயே முடியும். அவர்களிடம் மறைந்து வளர்வது துன்பந்தான்.

இப்போது பெண்களின் நிலையைப் பற்றி சிந்திப்போம். தகாத வாழ்வு வாழ்ந்து கூடாத முறையில் வாழ்ந்தவர்கள் அமைதியாக வாழ்வ தில்லை. பலர் அல்லலைத் தாங்க முடியாது அழுகிறார்கள். அவர்களின் மதிகெட்ட செயலின் காரணமாகப் பெண்கள் இரவும் பகலும் புலம்பும் நிலையை அடைகிறார்கள்.

அப்படிப்பட்ட பெண்கள் இருக்கும் இடத்தில் கால் எடுத்து வைக்காதே. அவளுடைய மூச்சு உன்மீது பட்டாலே உனக்கும் தொத்து நோய் பற்றிவிடும். அவர்களைக் கனி என்று நம்பி சுவைத்தால், உன் வாழ்வின் மலர்கள் உதிர்ந்து விடும். முழு நிறைவுடன் நீ நல்லபடி வாழ வேண்டுமானால் அந்த ஊனை விற்று உயிர் வளர்த்துக் கொள்ளும் ஊர் எச்சிலை நாடாதே. இது ஒரு சமூகக் கொடுமை.

## சினம்

சூறாவளி மரங்களைச் சாய்த்து விடுகிறது. இயற்கை படைத்த எழிலை அழித்து விடுகிறது. நில நடுக்கம் நகரங்களையே அழித்து விடுகிறது. அதே போன்ற சினங் கொண்டவன் தன்னைச் சுற்றிப் பல தீங்குகளை உருவாக்கிக் கொள்கிறான்.

அல்லலையும், அழிவையும் அவனே ஆக்கிக் கொள்கிறான்.

உன்னிடம் உள்ள குற்றம் குறைகளை நினைவில் கொண்டால், பிறர் செய்யும் தவறுகளை நீ பொருட்படுத்தாது மன்னிக்க விரும்புவாய்.

எப்போதும் சீற்றம் கொள்ளாதே. அது உன் வாளையே கூர்மையாக்கிக் கொண்டு உன்னையே குத்திக்கொள்வதற்குச் சமமாகும். அது உன் உற்ற நண்பனையே கொலை புரியும் கொடிய செயலாகும். உனக்குச் சினத்தை உண்டாக்கக் கூடிய செயலில் பிறர் ஈடுபடும்போது நீ சம நிலையைக் கைவிடாது, பொறுமையுடன் சிந்திக்க முற்பட்டால் நல்ல தெளிவு ஏற்பட்டு அவற்றை எல்லாம் மறந்துவிடக் கூடும்.

ஆத்திரப்படுபவனுக்கு அறிவு மட்டு என்பதை மறக்காதே. பிறர் சினமடைவதைக் கண்டு நீ பெறவேண்டிய பாடத்தைக் கற்றுக்கொள். சினத்தை உன்னால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை என்றால் அதை மறந்துவிடு.

உணர்ச்சி வயப்பட்டு எதையும் செய்திடாதே. அதனால் நீ கடும் புயலில் கடலில் சிக்கியவன் போலத் தவிக்க நேரிடும். உன் சீற்றத்தைக் கிளரக் கூடியவர்களை நேர் காணாதே. துடுக்குடன் உன்னிடம் பேசுபவர்களிடமிருந்து நீ ஒதுங்கி இரு. அகந்தை கொண்டவர்கள் ஆத்திரத்தை உண்டாக்கக் கூடிய முறையில் நடந்து கொள்வார்கள் என்பதை மறக்காதே. முட்டாள்கள் தாம் அதற்கு இலக்காகி விடுவர். அறிவாளிகள் அதைக் கண்டு சினம் கொள்ள மாட்டார்கள். சிரித்துக் கொண்டே புறக்கணித்து விடுவார்கள்.

வஞ்சக எண்ணம் ஒரு போதும் உன் நெஞ்சத்தில் இடம் பெறக் கூடாது. அது உன் உள்ளத்தை எப்போதும் வாட்டி வதைத்துக் கொண்டே இருக்கும்.

எப்போதும் யாரையும் மன்னிக்கும் மனப்பான்மை கொண்டிரு. பழி தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று உறுதி கொள்வதும், அதற்கான சமயம் எப்போது வரும் என்று தேடிக் கொண்டிருப்பதும் கூடாது. அதனால் உனக்கே நீ துன்பத்தையும், தொல்லைகளையும் தேடிக் கொள்ள நேரிடும்.

ஆத்திரப்பட்டுச் சினத்துடன் பேசுபவர்களிடம் நயமாக இன்முகத்துடன் பேசுவதே நல்லது. தண்ணீரைக் கொண்டு தணலை அழிப்பதுபோல பிறரின் சினத்தை உன் நன் மொழிகள் அழித்து

விடும். இப்படி நீ நடந்து கொண்டால் உன்னைப் பகைவனாக நினைப்பவன் கூட உன் உற்ற நண்பனாகி விடுவான்.

சினத்தின் மூலம் எதையும் பெரிதாகப் பெற்று விட முடியாது. அறிவற்றவர்களே அதிகமாக ஆத்திரப்படுவார்கள்.

சினத்தின் தொடக்கமே தவறானது. உள்ளக் குறைபாட்டின் விளைவே சினம். பெரும்பாலும் சினம் உன்னைப் பிறரிடம் மன்னிப்புக் கோரவே செய்யும். சினம் வந்தால் அதன் பின் துன்பம் தொடரும்.

## இரக்கம்

இளவேனிற் காலத்தின் மரங்கள் மலர்ந்த மலர்களைப் பறித்து நிலத்தின்மீது வீசுவது போல— கோடையின் அன்பால் நல்ல அறுவடையை மக்கள் அடைவது போல—இரக்கத்துடன் புரிந்திடும் புன்னகையே, நலிந்து தவிக்கும் மக்களுக்கு நன்மை தரும்.

எவன் ஒருவன் இரக்க குணம் கொண்டு பிறரிடம் பழகுகிறானோ, அவன் தன்னை மற்றவர்களுக்கு அறிமுகப்படுத்திக் கொள்கிறான்.

இறைச்சிக் கடைக்காரன் ஆட்டுக் குட்டிகள் குரலைப் பொருட்படுத்துவதில்லை. அதைப் போலவே கல் நெஞ்சம் கொண்டவர்கள்

பிறருடைய துன்பத்தையோ, துயரத்தையோ, ஏழையையோ கண்டு கவலைப்பட மாட்டார்கள்.

ஆனால், இரக்கம் கொண்டவர்கள் பிறரின் துன்பத்தைத் தனக்கு ஏற்பட்ட துன்பமாகக் கருதிக் கண்ணீர் விடுவார்கள். அவர்கள் சிந்திடும் கண்ணீர் மலர்கள்மீது விழும் பனித்துளிகள் போல இனிமையானவை.

எனவே, ஏழையின் குரலைக் கேட்பதற்குத் தயங்காதே. அப்பாவி மக்களின் அல்லலைக்கண்டு உன் உள்ளத்தைக் கல் ஆக்கிக் கொள்ளாதே.

ஏதிலர்களுக்கும், ஆதரவற்றவர்களுக்கும், வாழ்விழந்த விதவைகளுக்கும் அன்புக் கை நீட்டி, ஆறுதல் மொழி புகன்று, இயன்ற உதவியைச் செய்திடத் தயங்காதே.

ஆடையின்றித் தெருவில் நாடோடிகளாகத் திரிபவர்களுக்கும், ஆதரவற்ற நிலையில் குளிரிலும் மழையிலும் நடுங்கும் ஏழைகளுக்கும் மனம் திறந்து உன்னால் இயன்ற உதவியைச் செய்து வாழ வைத்திடு.

ஏழைகள் நோய் வாய்ப்பட்டுப் படுக்கையில் புரண்டு கிடக்கும்போது இருண்ட இருட்டு அறைகளில் எண்ணற்றவர்கள் அல்லல்படும் போது, அவர்களின் நிலையைக் கண்டு இரக்கம் கொள்ளாது, தனக்கு மட்டும் அனைத்து நலமும் இருந்து வரவேண்டும் என்று நினைப்பது முறையற்றது.

## ஆசையும் காதலும்

இளைஞனே! விலைமாதிடம் எச்சரிக்கையாக இரு. அவள் உன்னை அடைய கவர்ச்சியைக் காட்டுவாள். ஆசைகளைத் தூண்டுவாள். இன்பம் நுகர மயக்கமூட்டிப் பழகுவாள். நீ அறிவு கெட்டு மயங்கி விட்டால் உன் அழிவை நீயே தேடிக் கொள்வாய்.

எனவே, அவளுடைய ஏமாற்றத்திற்குப் பலி யாகி விடாதே. உன் உள்ளத்தைப் பறிகொடுத்துத் தவிக்காதே.

உனக்கு மகிழ்ச்சியைத் தரவேண்டிய உடல் நலம் படிப்படியாகக் குறைந்து வற்றிவிடும். இளமைக் கோலம் மறைந்து இளைய வயதிலேயே கிழவனாகி விடுவாய்

ஒழுக்கமும் நல்ல நடத்தையும் உள்ள பெண்ணின் நிலை விலை மகளைப் போன்ற தில்லை. அவள் அல்லி மலர் போன்று தூய்மை யானவள். அவள் சிரிப்பில் செம்மலர் பூத்திடும். அவளுடைய கண்கள் இரு சுடர் போலக் களங்க மற்று காணப்படும். அவளிடம் எளிமை இருக்கும். உண்மை இருக்கும். அவள் முத்தத்தில் தேனின் இளமை இருக்கும். அவளின் உதடுகளில் நறுமணம் வீசும். அப்படிப்பட்டவளிடம் உன் அன்பைச் செலுத்து. உன் மனத்திற்கு இன்பம் ஏற்படும். எல்லா நன்மைகளையும் பெற்று ஏமுற்று வாழ்ந்திடுவாய்.

## பெண்

பெண்ணே! அழகு மகளே! உன் உள்ளத்தில் சில உண்மைகள் குடி கொள்ளட்டும். நீ பெற்றிடும் தெளிவுடன் எழிலைக் கட்டட்டும். தாமரை மலர் போல உன் அழகு மலரட்டும்.

நீ பருவம் அடைந்து அழகு மங்கையாகக் காட்சி தரும்போது, பல ஆண்களின் பார்வை உன்மீது படும். அவர்கள் ஏன் அப்படிப் பார்க்கிறார்கள் என்பது உனக்குத் தெரிய வரும். உன்னைத் தீய செயலுக்கு உட்படுத்த முயலுவார்கள். கெட்ட எண்ணங்களுடன் உன்னிடம் பேசி உன்னைக் கடத்திச் செல்ல நினைப்பார்கள்.

உன்னை நீதான் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். உன் மனத்தைப் பறி கொடுத்து விடாதே! ஆண்கள் பேசும் இச்சக மொழிகளுக்கு மயங்கிப் பணிந்து விடாதே.

நன்றாக மனத்தில் உறுதிக் கொள். ஆண்களுக்கு உற்ற துணை பெண்தான். அதற்காக உணர்ச்சிக்கு அடிமைாகி விடக்கூடாது. ஆணின் ஆசைகளை நிறைவேற்றுவது மட்டுமே பெண்ணின் கடமையன்று. ஆண் பாடுபடும் போது பெண் உதவியாக இருப்பதுதான் வாழ்க்கையின் குறிக்கோள். ஆசைக்கு ஏற்றமுறையில் அன்புடன் ஆறுதல் அளித்து துணையாக இருக்க வேண்டும். இந்தக் குணங்களைக் கொண்டவள் தான் நல்ல ஆணின் உள்ளத்தைக் கவர முடியும்.

பெண் எளிமையும், இனிமையும், அடக்கமும் கொண்டிருக்க வேண்டும். அவள் தன் கடமைகளைச் செய்திட நாட்டம் கொண்டிருக்க வேண்டும். நல்ல பெண் தேவையற்று ஊர் திரிய விரும்ப மாட்டாள். எப்போதும் உண்மையைப் பேசுவாள். பணிவும், கீழ்ப்படிதலும் அவளுக்கு உரிய பண்பாகும். எப்போதும் முன் எச்சரிக்கையாக இருந்து, தன் ஒழுக்கத்தைப் பாதுகாத்துக் கொள்வாள். அவள் அன்புப் பார்வைகள் அவளுக்குச் சரியான முடிவுகளை மேற்கொள்ளத் துணை புரியும். அவளைக் கண்டால் விலை மாதர்கள் கூட வெட்கித் தலை குனிவார்கள். வாய் திறந்து பேசக்கூட அச்சப்படுவார்கள். அவளிடம் காணப்படும் ஒழுக்கம் அந்த விலை மாதர்களுக்குத் திகைப்பை உண்டாக்கும்.

அப்படிப்பட்ட பெண்ணை மனைவியாக அடைபவன் வாழ்நாள் முழுவதும் மகிழ்ச்சியாக வாழ்வான். நிறைந்தஅன்பும் அமைதியும் வீட்டில் எப்போதும் இருக்கும். இல்லத்து அரசியாக எல்லாப் பொறுப்புகளையும் அவள் சீராகச் செய்து வருவாள். எதையும் சீர் தூக்கி ஆய்ந்த பின்னரே அவள் முடிவுகளை மேற்கொள்வாள். அவள் சொல்லை எவரும் தட்டிக் கழிக்க மாட்டார்கள்.

அவள் அதிகாலையில் எழுவாள். வீட்டு வேலைகளைக் கவனிப்பாள். யார் யாருக்கு என்ன வேலையைத் தரவேண்டுமோ அதைப் பகிர்ந்து தருவாள். குடும்பத்தைக் கவனித்துக் கொள்வதில்

மிக்க மகிழ்ச்சி கொள்வாள். எதைச் செய்ய வேண்டும், எப்படிச் செய்ய வேண்டும், யார் செய்திட வேண்டும் என்பதை மிக்க அக்கறையுடன் சிந்தித்துத் செயல்படுவாள். எதையும் அளவோடு, சிக்கனமாகச் சிறப்பாகச் செய்திடுவாள்.

அவள் குடும்பத்தைக் கட்டிக் காக்கும் திறமையைக் கண்டு கணவன் மகிழ்வான். எல்லோரும் அவளைப் பாராட்டுவதைக் கேட்டு மகிழ்வாள். பெற்ற குழந்தைகளுக்கு நல்லறிவு புகட்டி வளர்ப்பாள். தன்னைப் போல குழந்தைகளையும் நல்லவர்களாக வளர்த்திடுவாள்.

அவள் எதைக் கூறினாலும் சிறியவர்கள் பணிந்து நடப்பார்கள். அவள் கண்ணசைவைக் காட்டினாலே காரியங்கள் ஒழுங்காக நடத்திடும்.

அவள் கட்டளையை நிறைவேற்றப் பணியாளர்கள் துடித்து ஓடுவர். அவள் எதைச் சுட்டிக் காட்டினாலும் அதைப் புரிந்து கொண்டு எல்லோரும் நடப்பார்கள். அவளுள்ளத்தில் எப்போதும் அன்பு குடிகொண்டிருக்கும். செல்வ மிகுதியால் உந்தப்பட்டு எதையும் தவறாகச் செய்திடமாட்டாள். வறுமைத் தொல்லைகள் வரும் போது உறுதியாக நின்று பொறுமையுடன் செயலாற்றிக் குடும்பத்தைக் காத்திடுவாள்.

கணவன் குழப்பத்திலும், தொல்லைகளிலும் துயரப்படும்போது அவள் துணையாக நின்று,

ஊக்கமளித்து புதிய ஒரு தெம்பை உண்டாக்குவாள். மனைவியின் மடியில் தலை வைத்துக் கணவன் ஆறுதல் அடைவான்.

அப்படிப்பட்டவளைத் தன் மனைவியாகப் பெற்றவன் வாழ்வு எப்போதும் இன்பமாக இருக்கும்.

அவளை 'அம்மா' என்று அழைத்திடும் பிள்ளைகளுக்கு எந்த ஒரு குறையும் இல்லாமல், இன்பம் பொங்கும் நிலை இருக்கும்.

## கணவன்

மனிதனாக பிறந்தவன் திருமணம் செய்து கொண்டு இல்லற வாழ்வு நடத்த வேண்டும் என்பது இயற்கையின் கட்டளை. நீயும் ஒரு மனைவியை அடைந்து சமூகத்தில் மதிப்புடன் வாழ்ந்திடு.

ஆனால் பரபரப்புற்று முடிவை மேற்கொண்டு விடாதே. ஏன் என்றால் இப்போது நீ எடுக்கும் முடிவைப் பொருத்துதான் உன் எதிர்கால வாழ்க்கை அமையும்

எப்படிப்பட்ட பெண்ணை நீ மனைவியாக அடைய விரும்புகிறாயோ, அதைப்பற்றி முன்னதாகவே சிந்தித்துச் செயல்படு.

தன்னை அழகுப்படுத்திக் கொள்ள அதிக நேரம் செலவிடும் பெண்ணை விரும்பாதே.

புதுப்புது ஆடைகள், அணிகலன்கள் மீது ஆசை கொண்டவளை விரும்பாதே. தன்னை எல்லோரும் பாராட்டவேண்டும் என்று ஆசைப்படுபவளை விரும்பாதே. எதற்கு எடுத்தாலும் சிரிப்பவளை விரும்பாதே. உரத்த குரலில் பேசிடும் பெண்ணை விரும்பாதே. வீட்டோடு தங்கி இருக்காமல் ஊர் சுற்றும் பெண்ணை விரும்பாதே. ஆண்கள் எதிரில் தோன்றி கவர்ச்சியைக் காட்டிடும் பெண் களை விரும்பாதே. அப்படிப்பட்ட பெண்கள் பாதையில் நடமாடாதே. அவர்களின் புற அழகில் மயங்கி விடாதே.

நல்ல உள்ளமும், நல்ல குணமும், தூய்மை யான ஒழுக்கமும் கொண்டவளாக இருப்பவளை உன் மனைவியாக ஏற்று இல்லற வாழ்வு நடத்த ஆசைப்படு. நல்ல அறிவு கொண்டவளைத் தேர்ந்தெடுத்து வாழ முற்படு அப்படிப்பட்டவள் தான் உனக்கு நல்ல வாழ்க்கைத் துணைவியாக இருக்க முடியும்.

அப்படிப்பட்ட சிறந்த மனைவியை உலகம் அளிந்து அரிய பரிசாக மதித்திடு.

உன் மனைவியே உன் இல்லத்தின் அரசி. உன் அன்பைச் செலுத்தி அவள் நெஞ்சத்தில் இடம் பெற்றிடு. அவள்தான் குடும்பத் தலைவி என்பதால், அவளுக்கு எப்போதும் உரிய மதிப்பும், மரியாதையும் கொடுத்து நடந்திடு.

தக்க காரணம் ஏதும் இல்லாதபோது மனைவியிடம் உன் எதிர்ப்பையோ, சினத்தையோ காட்டிக் கொள்ளாதே. உன் இன்ப துன்பங்களில் அவளுக்கும் உரிய பங்கினைக் கொடுத்துவிடு.

அப்படியே உன் மனைவி தவறுகள் செய்ய நேர்ந்துவிட்டாலும் நல்லறிவு புகட்டித் திருத்த முற்படு. எந்தக் காரணத்தைக் கொண்டும், வலுக்கட்டாயமாக எதையும் செய்திடக் கட்டாயப் படுத்தாதே.

அவள் உன் படுக்கையின் பங்காளி; அவளுக்கு இரண்டகம் நினைக்காதே. அவள் உன் குழந்தைகளுக்குத் தாய்; உன் உடலின் உயிர்—அதை மறந்துவிடாதே!

அவளிடம் எதையும் மறைக்காதே. நீ நன்றாக வாழ வேண்டும் என்ற ஆசையால், பல அறிவுரைகளை அவளும் கூறவேண்டி வரும். நீ அவளின் உள்ளத் தூய்மையைப் புரிந்துகொள்ள வேண்டும்.

அவள் பிணியால் பீடிக்கப்பட்டாலும், வலியால் துடித்தாலும், நீதான் அவளுக்கு அன்போடு துணை நின்று தேற்றவேண்டும். உன் அன்பான பார்வையே அவளுக்கு மா மருந்து அதுவே, அவளின் வலியைக் குறைத்து விடும் அல்லலை அகற்றிவிடும்.

பெண் இனத்தின் உடல் அமைப்பும் மெல்லிய உறுப்புகளின் அமைப்பும், கருத்தில்

கொண்டு, எக் காரணம் கொண்டும் முரட்டுத் தனமாக நடந்து கொள்ளாதே. கடுமையான சொற்களை வீசி மனத்தைப் புண்படுத்தி விடாதே. மேலும், நீயே உன் குற்றம் குறைகளைச் சிந்தித்து முடிவுகளை எடு.

## தந்தை

பெற்ற பிள்ளைகளுக்கு நீதான் தகப்பன் என்பதை மனத்தில் எப்போதும் இருக்கவேண்டும். பெற்ற பிள்ளையைப் பேணிக் காப்பதும் பெற்ற தகப்பனின் கடமை.

நீ பெற்ற பிள்ளை பெரியவனாக உனக்கு நல்ல பெயரையும், நற்பயனையும் தரப் போகிறானா, இல்லையா என்பதும் நின்னிடம் உள்ளது. இப்படிப்பட்ட பிள்ளையை ஏன் பெற்றோம் என்று இடர்ப்படாமல் இருக்க வேண்டுமானால் அதற்கான பொறுப்பை நீதான் உணர்ந்து நடந்து கொள்ள வேண்டும்.

நீ பெற்ற பிள்ளை சமூகத்தில் நல்ல குடிமகனாக விளங்கப் போகிறானா, இல்லை ஊரார் பழிப்பிற்கு ஆளாகப் போகிறானா என்பதை முடிவு செய்யும் பொறுப்புமுன்னிடமேதான் உள்ளது.

எவ்வளவு விரைவாக மக்களுக்கு நல் அறிவு புகட்டுகிறாயோ அதைப் பொறுத்து நல்ல எதிர்

காலம் பிள்ளைகளுக்கு அமையும். நல்ல பல உண்மைகளைப் பெற்ற பிள்ளை அறிந்திருக்கச் செய்திடு.

பெற்ற பிள்ளைகளின் மனப்போக்கையும், ஆசைகளையும் தந்தை கண்டறிந்து, கூற வேண்டிய அறிவுரைகளைக் கூறி, நல்வழி காட்டுவது தந்தையின் கடமை. தீய பழக்க வழக்கங்களில் இருந்து பிள்ளைகளைக் காப்பது தந்தையின் கடமை. ஒழுக்க வாணனாக வளரும் பிள்ளை பிற்காலத்தில் புகழ் அடைந்து தந்தைக்கும் பெருமையைச் சேர்ப்பான்.

மகனை முட்டாளாக வளர்த்தால், பிற்காலத்தில் மகனைத் தந்தையே கடிந்து கொள்ள வேண்டி இருக்கும். நல்ல முறையில் வளர்க்கப் பட்ட மகன் தந்தையின் இறுதிக் காலத்தில் பெருமைக்குரியவனாக இருப்பான்.

மண்ணுக்கு உரிமைக்காரன் நீ. பயிரிடாமல் இருக்காதே. நீ எந்த விதையை எப்படி விதைக்கிறாயோ அதைப் பொருத்தே உன் அறுவடையும் இருக்கும்.

கீழ்ப்படிந்து நடக்க மகனுக்குக் கற்றுக் கொடு. உனக்கு அது நல்லது. எளிமையாக வாழக் கற்றுக் கொடு; எந்த மானக்கேடும் ஏற்படாது.

மகன் நன்றியுள்ளவனாக வளர்க்கப்பட வேண்டும். அதனால் அவன் பல நன்மைகளை அடைவான். இரக்க குணமுடையவனாக

மாற்றிடு. எல்லோருடைய அன்பையும் மதிப்பையும் பெற்றிடுவான்.

தெளிவான சிந்தனை உடையவனாக மகன் இருந்தால், அவன் உடல் நலத்தை நன்கு பாதுகாத்துக் கொள்வான். எதிலும் முன் எச்சரிக்கையுடன் நடக்கும்படி வளர்த்தால் அவன் பிற்காலத்தில் பல நன்மைகளை அடைவான்.

அறத்துக்கும் ஒழுக்கத்திற்கும் மதிப்பளிக்க மகனுக்குக் கற்றுக் கொடு. உலகமே அவனைப் பாராட்டும்

எதிலும் விழிப்போடும், சுறுசுறுப்புடனும் செயலாற்றக் கற்றுக் கொடு. அவனிடம் செல்வம் குவியும். வாழ்வில் உயர்வை அடைவான்.

மகனுக்கு அறிவியல், இலக்கியம் கற்றுக் கொடு. அவை அவனுக்குப் பயன் தரும்.

உலக அறிவைக் கொடு. அவன் இறப்பு மகிழ்ச்சியாக இருக்கும்.

## மகன்

இயற்கை எத்தனையோ உயிரினங்களைப் படைத்துள்ளது. ஆனால், மனிதன் அவற்றை எல்லாம் கண்டு தெரிந்து கொள்ள வேண்டியவை பல உள்ளன. அப்படி மற்ற உயிரிகளிடம் பெற்றுக் கொண்டதை மனிதன் தன் வாழ்வில் கடைப்பிடித்திட வேண்டும்.

வயற் காட்டிற்குச் சென்று ஒரு கொக்கைக் கவனிக்கட்டும். அது தன்னுடைய தாய் தந்தையைத் தன் சிறகுகளில் அடைக்கலம் தந்து பாதுகாப்பான இடத்திற்குக் கொண்டு செல்வதையும், தன்னைப் பெற்றவர்களுக்கு உணவைத் தேடித் தருவதையும் காணலாம்.

எனவே, பிள்ளையாகப் பிறந்த மனிதனே, நீயும் உன் பெற்றோரைப் பாதுகாத்து நன்றிக் கடனைச் செய்திடத் தவறாதே.

பெற்றவர்களின் பேச்சுப்படி நட. தாய் சொல்லைத் தட்டாதே. பெற்றோர்கள் எதையும் உன் நன்மைக்குத்தான் கூறுவார்கள். உன் மீது உள்ள பற்றின் காரணமாகத்தான் பெற்றோர்கள் கண்டனங்களைச் செய்வார்கள்.

நீ நன்றாக இருக்க வேண்டும் என்பதற்காகப் பாடுபட்டவர்கள் உன் பெற்றோர்கள். உனக்காகப் பாடுபட்டவர்கள். எனவே, அவர்களின் வயதிற்கு மதிப்புக் கொடு. நரைத்த முடியுடன் விளங்கும் உன் பெற்றோர்களை அவமதிக்காதே அவர்களின் வாழ்விற்குத் துணையாக இரு. அவர்களின் வாழ் நாள்கள் அமைதியுடன் நடக்கட்டும். நீ, உன் பெற்றோருக்கு அளிக்கும் மதிப்பும் ஒத்துழைப்பும் உன்னுடைய பிள்ளைகள் கண்டு, அவர்களும் உன்னைப் போலவே உனக்குதவி செய்து பாதுகாத்து நல்லதைச் செய்வார்கள்.

## உடன்பிறப்புகள்

நீங்கள் எல்லாம் ஒரு தாய் வயிற்றில் பிறந்தவர்கள். உங்களின் ஒரே தந்தைதான் உங்களுக்காகப் பாடுபட்டு, உங்களை வளர்த்தவன். உங்கள் எல்லோரையும் பால் கொடுத்து வளர்த்ததும் ஒரே தாய்தான்.

எனவே, நீங்கள் எல்லோரும் பற்று, பாசம் கொண்டு குடும்பத்தில் அமைதியும், மகிழ்ச்சியும் எப்போதும் நிலவப் பாடுபடுங்கள்.

அப்படியே நீங்கள் பிரிந்து வாழ நேரிட்டாலும் உங்கள் பற்று, அன்பு, உறவு உங்கள் குடும்பத்தினரிடம் எப்போதும் போல இருக்கட்டும். உன்னோடு பிறந்தவர்களை மறந்து விடாதே. உன் பெற்றோர்களை மறந்துவிடாதே. உலகப் பெருங் குடும்பத்துள் உன் குடும்பமும் அடங்கும். அனைவரும் உறவினர். இந்தப் பேருள்ளமே சீருள்ளம்.

உன் உடன் பிறப்புகளிடம் அன்பாக இரு. அவர்களுக்குன்னால் முடிந்த உதவி செய்திடு. உடன் பிறந்த மகளிர் வறுமையிலோ தொல்லைகளிலோ திண்டாடும்போது அவர்களைப் புறக்கணித்து விடாதே.

அப்படி ஒன்றுபட்டு அன்பாக வாழ்ந்தால்தான் உன் குடும்பத்தின் உடைமையும் உறவும் எல்லோருக்கும் கிட்டும். அந்த நிலையில்தான் பெற்றோர்களும் குறிப்பாக உன் தாய் தந்தை

உடன் பிறந்த எல்லோருககும் அன்பு காட்டி நன்றாக வ ார்க்க முடியும். உன்னைப்போல் உன் உடன் பிறந்தவர்களும் நன்றாக வாழ முடியும்.

## அறிவும்—அறியாமையும்

உலகம் அளிப்பது அறிவுச் செல்வம். அது விருப்பப்படி யாருக்கு எந்த அளவிற்குழைத்து முயல்கிறார்களோ அந்த அளவுக்கு முடிவு செய்து தருகிறது.

உனக்கு உலகம் எந்த அளவிற்கு அறிவைத் தந்திருக்கிறது என்பதை நீ அறியவேண்டும். எதிலும் உண்மையைக் கண்டறியும் ஆற்றலைப் பிறருக்குப் பகிர்ந்து கொடு. ஏழைகளுக்கு ஏதுமற்ற வர்களுக்கு நல்லறிவைப் புகட்டு. அப்போதுதான் சமன்மை ஏற்படும். அது உனக்கே வளர்ச்சியைத் தரும். ஏழை பணக்காரன் என்ற ஏற்றத் தாழ்வை நீக்கும்.

நல்ல அறிவு படைத்தவன் தவறான ஊகம் கொள்ள மாட்டான். எதையும் அறிந்தவனுக்கும் சில சமயங்களில் ஐயப்பாடு உண்டாகும். படிக்காத முட்டாளுக்கு எதிலும் ஐயம் என்பதே உண்டாகாது. தான் எல்லாம் அறிந்தவன் என்பவன் தன் அறியாமையை அறிந்தவன் அல்லன்.

அறியாமையில் செருக்குப் படைத்திருப்பவன் மன்னிப்புக்கு உரியவன். வரம்புக்கு மீறி அதிகம்

பேசுபவன் முட்டாள்மையினால் தவறு செய்கிறான். அப்படிப்பட்டவர்களின் பொறுப்பற்ற பேச்சைப் பொருட்படுத்திப் பெரிதாக எடுத்துக் கொள்ளாமல் அவர்களிடம் இரக்கம் காட்டுவது நல்லது. நான்தான் அறிவாளி—அனைத்தும் அறிந்தவன் என்று ஆணவம் கொள்ளாதே! எதையும் யாரும் முழுமையாக அறிந்தவர் இல்லை. எவனுக்கும் தன் அறியாமையும், தன் குற்றமும் எளிதில் புலப்படாது.

நல்ல அறிவாளி தன் அறியாமையை உணர்ந்து அடக்கமாக இருப்பான். எதற்கும் தன்னைப் பிறர் பாராட்ட வேண்டும் என்று நினைக்க மாட்டான். அறிவிலி தன் அறியாமைக் கடலின் ஆழத்தில் படிந்துள்ள கூழாங் கற்களையே பெரிதாக நினைத்துத் தேடுவான். அவைதாம் கடல் அடியில் உள்ள முத்துகள் என்பான். அதைக் கேட்டுப் பிறர் பாராட்ட வேண்டும் என்று ஆசைப்படுவான்.

பயன் அற்ற பணிகளைப் புரிந்துவிட்டு மாபெரிய செயற்பாடுகள் புரிந்து விட்டதாகப் பீற்றிக் கொள்வான். எதைக் கண்டு வெட்கப்பட வேண்டுமோ அதை யுணர மாட்டான். அறிவுப் பாதையில் செல்வதாகத் தகாத செயல்களைப் புரிந் திடுவான். அவனுடைய முயற்சிக்குப் பரிசாகக் கிடைப்பது ஏமாற்றமும் தோல்வியுமே ஆகும்.

அறிவாளி சிந்தித்துச் சித்தித்து அறிவைக் கொள்முதல் செய்து கொள்வான். கலைகளில்

நாட்டம் கொண்டு, அதன் பயனாகப் பொது மக்களுக்குப் பயன்படக்கூடிய காரியங்களைப் புரிந்து மதிப்பைத் தேடிக்கொள்வான். ஒழுக்கமே அவன் கண்ட சிறந்த அறிவு. வாழ்க்கையை ஆராய்ந்து புரிந்து கொள்வதையே அவன் அறிவியலாகக் கொண்டவன்.

## செல்வமும்—ஏழைமையும்

எவன் ஒருவன் ஊக்கத்தால் உழைப்பால் செல்வத்தைப் பெற்று, அதைச் சரியாகப் பயன் படுத்துவதற்கான அறிவையும் பெற்றிருக் கிறானோ, அவன் பெருமைக்குரியவன்.

அவன் தன் செல்வத்தைக் கண்டு மகிழ் கிறான். ஏன் என்றால், அந்தச் செல்வம் அவனுக்கு நல்லது செய்யத் துணை புரிகிறது.

அவன் ஏழைகளைக் காப்பான். காயமுற்ற பிணியாளருக்குத் தொண்டு செய்வான். நலிந்த மக்களுக்குப் பேராதரவு அளிப்பான்—யாரையும் தடுக்க நினைக்க மாட்டான். யாரிடம் பரிவு காட்ட வேண்டுமோ, அவர்களின் தேவைகளைக் கேட் டறிந்து, முறையாகப் போதிய உதவியளித்து மகிழ்வான்.

பிறரிடம் உள்ள திறமைக்கு மதிப்புக் கொடுப் பான். சீரிய நோக்கம் கொண்டவர்களுக்கு ஊக்க மளித்து உதவி புரிவான். பாராட்டத்தக்க பெரிய காரியங்களைச் செய்து நல்ல பல திட்டங்களைத்

தீட்டி, வேலை வாய்ப்புகளை அதிகரித்து நாட்டை வளமானதாக்குவான். பல கலைகள் அவனால் முன்னேற்றமடையும்.

தன்னிடம் பகுதியாகக் குவிந்திருக்கும் செல்வம் ஏழைகளுக்கும், அக்கம் பக்கம் வசிப்பவர்களுக்கும் உரியது என்றே கருதுவான்.

எவரையும் அவன் ஏமாற்ற மாட்டான்.

ஆனால், தன்னிடம் குவிந்துள்ள செல்வத்தைத் தனக்கு மட்டுமே செலவிட்டு மகிழ்ச்சி கொள்பவன் பரிவிரக்கத்திற்குரியவன். ஏழைகளைக் கண்டால் வெறுப்பான். அவர்கள் பாடுபட்டு வியர்வையைச் சிந்துவதைச் கவனிக்க மாட்டான்.

கொஞ்சமும் இரக்கமின்றி, பிறரை ஒடுக்கி, வஞ்சித்துத் தன் வாழ்வை உயர்த்திக் கொள்வான். அவன் உடன் பிறந்தவர்களே நலிந்து விட்டாலும் கலங்கமாட்டான்.

ஏதிலர்களின் அழுகையைக் கண்டு, தான் மட்டும் பால் குடிப்பான். விதவைகளின் வேதனைக் குரலை அவன் இனிய இசையாகக் கருதுவான்.

செல்வத்தின் மீது அவன் கொண்டுள்ள தணியாத காதல், அவன் நெஞ்சத்தைக் கல்லாக்கி விடும். ஏழைகளின் துன்பம், இல்லாதவர்களின் ஏக்கம், வறுமையால் வாடிடும் மக்களின் துயரம் அவனை ஏதும் கலங்க வைக்காது.

அப்படிப்பட்டவனைத் தொடர்வது இழி மொழிகள். எப்போதும் அச்சத்துடன்தான் வாழ்க்கையை நடத்துவான். மற்றவர்களுக்கு அவன் இழைத்த கொடுமை அவன் நெஞ்சை விட்டு அகலாது. அவனுக்கு அமைதியைத் தராது.

துன்பத்தில் தவிக்கும் ஏழையின் நிலை என்ன?

தன்னலமும், கல் நெஞ்சமும் கொண்டவனை விட ஏழை மேலானவன். அவனும் மகிழப் பல காரணங்கள் உள்ளன.

அவன் அமைதியாக அமர்ந்து உண்ணும் போது, அவன் பக்கத்தில் சுரண்டி வாழ்பவர்களோ, புகழ் உரையின் மூலம் பிழைப்பவர்களோ இல்லை.

பணக்காரனுக்கு உள்ள கெட்ட நோய்கள் அவனுக்கு இல்லை.

அவனுக்குக் கிடைத்ததை உண்ணும்போது அது சுவையாகவே இருக்கிறது. அவன் அருந்தும் தண்ணீரே அவனுக்கு மகிழ்ச்சி தருகிறது.

ஏழையின் கடுமையான உழைப்பு அவன் உடல் நலத்தைப் பாதுகாக்கிறது.

ஏழை அளவிற்கு மீறிய ஆசைகளைக் கொள்வதில்லை. தனக்கு இன்றியமையாத தேவை எது என்பதையே நாடுகிறான். அதிலே தான் அவனுக்கு நிறைவு கிடைக்கிறது. உள்ள

தைக் கொண்டு வாழ்கிறான். கிடைத்ததை மன நிறைவோடு நுகர்ந்து இன்பமடைகிறான். அது பணம் படைத்த செல்வர்களுக்குகூடக் கிடைப்பதில்லை.

எனவே, செல்வர் பணத்தைக் கண்டோ, ஏழை தன் வறுமையைக் கண்டோ மனச் சோர்வு அடையத் தேவை இல்லை. அது மட்டுமில்லை; இயற்கை இருவருக்குமே மகிழ்ச்சியைப் பகிர்ந்து அளிக்கின்றது.

## மேலும்—கீழும்

மனிதா! பிறரிடம் இருந்து வேலை செய்ய வேண்டி இருக்கிறதே என்று கவலைப்படாதே. அதுதான் இன்றைய சமூகத்தில் உனக்கு அளித்துள்ள இடம். அதில் பல நன்மைகள் உனக்கு உண்டு. உனக்கு வாழ்க்கையில் தேவைகள் குறைந்துவிட்டன. பல கவலைகள் உனக்கு இல்லை.

நல்ல வேலைக்காரனாக இருந்து பணிந்து போவதால் மேலிட்டத்துக் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதால் நீ ஒழுக்கமுள்ளவனாக மாறி விடுகிறாய். மேலதிகாரி உன்னைக் கடிந்து கொள்ளும்போது வாய் திறந்து எதையுமே பேசாதே. நீ எதிர்த்துப் பேசாதிருப்பதன் மூலம் உனக்குப் பல நன்மைகள் ஏற்படும். உரிமைக்கு மானக் கேடற்றுப் பழகு.

உன் வேலைகளை விழிப்புடன் சுறுசுறுப்பாக நிறைவேற்று. உன் மேலாளின் நம்பிக்கைக்குரியவனாக உள்ளவற்றை வளர்த்துக்கொள். அதற்கான பலனை நீ உரிய காலத்தில் அவரிடம் அடைவது உறுதி.

மேலாளாக இருப்பவன் உடன் பணிபுரிபவர்களிடம் அறத்துக்குக் கட்டுப்பட்டு, முறையாக நடந்துகொள்ள வேண்டும். அப்போதுதான் பணியாளர்கள் மேலாளிடம் உண்மையாக, நேர்மையாக நடப்பார்கள். சொன்னதைச் செய்ய முன் வருவார்கள்.

பணியாலும் உன்னைப்போல ஒரு மனிதன் என்பதை மறந்து விடாதே. நீ பணியாரிடம் கடுமையாக நடந்துக்கொண்டு அதிக வேலை கொடுத்தால், அது அவனுக்கு அச்சத்தை உண்டாக்கும்.

பணியாளன் தவறு செய்யும்போது, அவனிடம் அன்பாகப் பேசி, அவன் தவற்றைப் புரிந்துகொள்ளும் முறையில் விளக்கம் அளித்துத் திருத்த முயல வேண்டும். மேலாள் மன்னிக்கும் மனப்பான்மையை அதிகம் கொண்டிருக்க வேண்டும். நீ ஒரு நல்ல மேலாள் என்று பணியாளன் உணர்ந்து விட்டால் அவன் இட்ட வேலைகளை மனமகிழ்ச்சியுடன் செய்து முடிப்பான். அவனுடைய பணியை மெச்சிடவும் அதற்கு உரிய முறையில் வெகுமதி அளிக்கவும் மேலாள் முன்வர வேண்டும்.

## அறவாணரும்—குடிமக்களும்

மக்கள் தங்களைப் போன்ற ஒருவனை அறமுறை செய்திட அவனிடம் அதிகாரத்தை தந்து, அவன் வழங்கும் அறத்திற்குக் கட்டுப்பட்டு நடக்க இசைந்துள்ளனர் என்பதை அறநடுவர்கள் உணரவேண்டும். அவர்களின் நம்பிக்கை வீண் போகாத முறையில் பெரிய பதவியில் இருக்கும் அறநடுவர்கள் முறையாக நடந்துகொள்ள வேண்டும்.

முறைநடுவர் உயர்ந்த இடத்தில் அமர்ந்து உரிய அதிகாரம் பெற்றிருப்பது நாட்டின் நலனைப் பாதுகாக்கவே என்பதை மறக்கக் கூடாது.

மக்களின் நல்வாழ்வில்தான் அதிகாரம் செலுத்துபவர்களின் சிறப்பு அடங்கி இருக்கிறது.

முறை நடுவர்கள் நேர்மை படைத்தவர்களாக இருக்க வேண்டும்.

மக்களின் நலத்தைக் கருத்தில் கொண்டு நிறை வேற்றப்பட்ட சட்டங்களைச் சீராகக் காப்பாற்றி, முறையாகச் செயல்படுத்தி, நாட்டில் வாழும் மக்களுக்கு மனமகிழ்ச்சியைத் தரவேண்டும்.

இரக்கம் காட்டப்பட வேண்டியவர்களுக்குத் தயங்காமல் சட்டத்தின் மூலம் உதவி புரிய வேண்டும். குற்றம் சாட்டப்பட்டவர்களை ஆய்ந்து தண்டனை அளிப்பதில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். குறைகளை அக்கறையுடன்

கேட்டு நிலைமைகளை ஆராய்ந்து முறை வழங்கப் படவேண்டும்.

மக்கள் அன்பையும், பாராட்டையும் பெறு வதில் அதிகாரம் செலுத்துபவர்கள், கண்ணும் கருத்துமாக இருக்கவேண்டும். மக்கள் மனம் வருந்தி, அச்சத்தின் காரணமாக முணுமுணுத் திடும் நிலை ஒருபோதும் உண்டாகக் கூடாது என்பதை அதிகாரம் செலுத்துபவர்கள், சட்டத்தை நிறைவேற்றுபவர்கள் நினைவில் கொள்ள வேண்டும்.

மக்களுக்குத் தக்க பாதுகாப்பும், அமைதியும் அளிப்பதன் மூலமே அதிகாரம் செலுத்துபவர் களுக்கும், சட்டத்திற்கும் மதிப்பு ஏற்படும்.

## இரக்கம்

உனக்கு என்ன என்ன வேண்டும் என்று நீ நினைக்கும்போதும், உன் குறைபாடுகளை நீக்கிக் கொள்ள முனையும்போதும் இயற்கையை நினைத்துக் கொள். உனக்குப் பேசவும், சிந்திக் கவும் அருள் புரிந்தது அது. உனக்கு வேண்டி யதை நீ பெற்றுக் கொள்ளவும், உன்னிடம் உள்ளதை வேண்டியவர்களுக்கு நீ அளிக்கவும் வேண்டும்.

உனக்குத் தேவையான உணவும், உடையும் இருப்பிடமும், தக்க உடல் பாதுகாப்பும் அனைத்து ஏந்துகளையும் உனக்குச் சமுதாயம்தான் அளிக்

கிறது. எனவே நீ அதை எல்லாம் சமுதாயத்துடன் பகிர்ந்து கொள்ள வேண்டும்.

மக்களின் நண்பனாக இருக்க வேண்டியது உன் கடமை. எல்லோரும் உன்னிடம் தோழமையின் நட்புறவு கொள்ளவேண்டும்.

முல்லை மலரில் இருந்து எப்படி நறுமணம் வெளிப்படுகிறதோ, அதைப் போன்று இரக்கமுள்ளவனிடமிருந்து நல்லவை வெளிப்படுகின்றன. அவன் தன் மனத்திற்கு இந்த வகையில் அமைதியைத் தேடிக் கொள்கிறான். அவன் அருகில் உள்ளவர்களின் மகிழ்ச்சியிலும், முன்னேற்றத்திலும் ஆர்வம் கொள்கிறான். தூற்றுபவர்களை அவன் பொருட்படுத்தமாட்டான். மனிதர்கள் தவறு செய்யும்போது, அவன் மனம் அல்லல்படும் சமயம் வாய்க்கும்போதெல்லாம் தான் நல்லதையே செய்திடுவான். பிறருக்குக் கேடு வரும்போது அதைப் போக்கி ஆறுதல் புரிவான்.

அவன் எப்போதும் பெரிய நோக்கம் கொண்டு மக்கள் இன்புற்று வாழ வழி செய்திடுவான்.

## முறைமை

சமூகத்தின் அமைதி நிலவிடும் நிலைமையை அடிப்படையாகக் கொண்டது முறைமை. ஒவ்வொரு குடிமகனுக்கு அவனுடைய பொருள்களுக்கு உரிய பாதுகாப்பு இருக்க வேண்டும். எனவே, உன் ஆசைகள் வரம்புக்குட்பட்டு

ஞாயமானதாக இருக்க வேண்டும். மற்றவர்களின் யுடைமைகளுக்குத் தீங்கு செய்யாதே.

பேராசைகளைக் கொண்டு, தகாத முறையில் பிறருடைய உயிருக்குக் கேடு செய்திட நினைக்காதே.

பிறரைக் குறை கூறித் தாழ்த்தாதே. பொய் சாட்சி கூறாதே.

வேலைக்காரர்களை வயப்படுத்திக் கொண்டு மற்றவர்களை வஞ்சிக்கவோ, மாற்றானுடைமையை, மனைவியை அடையவோ நினைந்து இழிசெயல் புரியாதே. அப்படிச் செய்தால் மனக்கவலைக்கு முடிவே இருக்காது. உன் நிலையை மாற்றிக் கொள்ள வழியே இருக்காது.

மாற்றாரிடம் ஞாயமாகவும், நேர்மையாகவும் நடந்துகொள். அப்போதுதான் அதை நீயும் பிறரிடம் பெற முடியும். உன்னை நம்பியவர்களை வஞ்சனை செய்யாதே. யாரையும் ஏமாற்றாதே. பிறர் பொருளைத் திருடுவது பெரிய இரண்டகமாகும்.

ஏழைகளை வஞ்சித்து ஒடுக்காதே. பாடுபடும் தொழிலாளியின் கூலியை ஏமாற்றாதே.

அதிகப் பயன் கருதி விற்பனை செய்யும்போது மனச் சான்றுக்குக் கட்டுப்பட்டு நட. ஏதும் அறியாத மக்களைச் சூரையாடாதே.

நீ பெற்ற கடனைத் திருப்பிக் கொடுத்துவிடு. ஏன் என்றால் அவன் உன்னை மதித்துக்

காலத்தில் உதவியவன். அவனிடம் கீழாக நடந்து கொள்ளாதே.

நீ இந்தச் சமுதாயத்தில் ஒரு குடிமகன் என்பதை நினைவில் கொள். நீ செய்த செயல்களை அடிக்கடி நினைத்துப் பார். தெரிந்தோ தெரியாமலோ யாருக்காவது தீங்கு செய்திருந்தால் அதற்குத் தக்க விலக்கினை உடனே தேடு.

## அறம்

ஈகைக் குணம் படைத்தவனே மகிழ்ச்சியுடன் வாழ்பவன். அவனிடம்தான் அன்பும், அறிவும், சிந்தனையும் குடிகொண்டிருக்கும்.

அவன் உள்ளத்திலிருந்துதான் நல்லது வெளிப்படும். அவன்தான் மனித சமுதாயத்திற்கு நல்லது செய்வான். ஒருவர் இன்னறப்படும்போது உதவிக் கை நீட்டுவான். ஏழைப் பங்காளனாக இருப்பான். சமுதாயம் முன்னேற்றம் அடைவதைக் கண்டு மகிழ்ச்சி கொள்வான். அவனைச் சுற்றி இருப்பவர்களைக் கடிந்து கொள்ள மாட்டான். பொறாமையுடன் இட்டுக்கட்டிப் பேசுபவர்களை நம்பமாட்டான். இழிமொழிகளை அறவே வெறுப்பான்.

அவன் எவரிடமும் பகையுள்ளம் கொள்ள மாட்டான். மன்னிக்க வேண்டியவர்களை

மன்னித்து மறப்பான். பழிவாங்க அவன் மனம் இடம் தராது.

தீங்கு செய்தவர்களுக்குத் தீங்கு செய்ய மாட்டான். அவர்களை வருந்தச் செய்து, திருத்துவான்.

மக்களின் மனக்கவலையையும், வருத்தத்தையும் கண்டு பரிவிரக்கப் படுவான். தன்னால் முடிந்தவுதவியைத் தயங்காமல் செய்து குறையைப் போக்கி அப்படி அவன் நல்லவனாக நடப்பதின் பலனை அவன் நுகர்வான்.

ஆத்திரமாக இருப்பவர்களை அவன் அமைதிப்படுத்துவான். சமுதாயத்தில் சண்டை சச்சரவுகள் ஏற்படாமல் தவிர்த்து நட்பமைதியை உண்டாக்குவான். எல்லோரும் நல்லெண்ணம் படைத்து எங்கும் அமைதி நிலவப் பாடுபடுவான். அவன்தான் அனைவரின் அன்பையும் பாராட்டையும் பெற்று வாழ்வான்.

## நன்றி

மரக்கிளையின் சாறு வேரில் சேருவதைப் போல், பாயும் ஆறுகள் கடலில் சேருவதைப்போல, நன்றியுள்ள ஒருவன் தான் பெற்றதை மீண்டும் செய்திடும் கடமையாகக் கருதுவான். உதவி புரிந்தவர்களிடம் அன்புடனும் மதிப்புடனும் நடந்து கொள்வான். தான் பெற்ற கொடையை மீண்டும்

நான் திரும்ப செய்திடப் போதிய ஏந்து இல்லை என்றாலும், அவன் பெற்ற உதவியை மறைக்காமல் எப்போதும் தன் நினைவில் கொண்டிப்பான். வாழ் நாள் முழுவதும் தனக்குப் பிறர் செய்த நற் செயலை மறக்கவே மாட்டான்.

அறச் சிந்தனை கொண்டவனின் கைகள் வானத்து முகில்களுக்கு ஈடானது. மழைதான் தானியங்கள், காய்கறி, கனி, பூக்கள், மூலிகை களைத் தருகின்றது. அதைப்போல ஈகைக்குணம் படைத்தவனிடம் எல்லா நன்மைகளும் மக்களுக்கு உண்டாகும்.

இரக்கமில்லாத அரக்க குணம் படைத்தவன் வெறும் மணல் நிரம்பிய பாலைவனத்திற்குச் சம மானவன். மணல் எதையும் விழுங்கி, மூடி மறைத்துக்கொள்ளும். அரக்க குணம் படைத்தவன் நல்லது ஏதும் செய்திட மாட்டான்.

வள்ளல் குணம் படைத்தவனைக் கண்டு பொறாமை கொள்ளாதே. அவன் செய்த ஈகைச் செயல்களை மறக்காதே. தாராள மனப்பான்மை யுடன் செய்திடும் செயல்கள் போற்றத் தக்கவை யாகும். பெற்ற உதவிக்குக் கைமாறு செய்திடத் துடிப்பது அதைவிட போற்றத் தக்கதாகும்.

## உள்ளத் தூய்மை

உண்மைக்கு உள்ள சிறப்பை நீ உணர வேண்டும். பெண்ணின் எளிமையையும் அழகை

யும் கண்டு களிக்கும்போது நீ அவனிடம் உள்ளத் தூய்மையுடன் நடந்து கொள்ள வேண்டும். அவனுக்கு இரண்டகம் நினைக்காதே. அவனின் வாழ்வைக் கெடுத்துக் கைவிட்டு விடாதே.

உள்ளத் தூய்மை படைத்தவன் ஏமாற்றவோ, போலியாக வஞ்சக நாடகம் ஆடமாட்டான். அவன் பொய்களை நம்பமாட்டான். எப்போது உண்மையைப் பேசுவான். அவன் மனிதனாக வாழ்வான். மனிதனுக்கு உரிய நற்குணங்கள், அவனிடம் குடி கொண்டிருக்கும். பகல்வேடக்கார னாக இருக்க மாட்டான். அவன் தன்னம்பிக்கை. கொண்டவன். இன்னல்களைக் கண்டு அஞ்ச மாட்டான். உண்மையைக் கூற அஞ்சமாட்டான். பொய் பேச அச்சப்படுவான்.

பேச்சில் எச்சரிக்கையாக இருப்பான். எது சரி, எது சரியில்லை என்பதைத் சிந்தித்துப் பேசு வான்.

எல்லோருக்கும் நட்புறவுடன் நல்ல அறிவுரை கள் கூறுவான். கொடுத்த வாக்குறுதியை நிறை வேற்றுவான்.

பகல் வேடம் போடும் வஞ்சக வேடதாரி எதையும் மறைத்தே வைத்திருப்பான். எதையும் இட்டுக்கட்டி உண்மையாகக் காட்டி விடுவான். ஏமாற்றுவதே குறியாகக் கொண்டிருப்பான்.

துன்பத்துடன் சிரிக்கவும், இன்பத்துடன் அழவும், உண்மை ஏதும் இல்லாத சொற்களைப் பேசியும் வாழ்வான்.

இருட்டில்தான் அவன் செயல்கள் இருக்கும். வெளிச்சத்தில் தவறுகள் புரிவான். தான் நிறைவுடன் பாதுகாப்பாக இருப்பதாக நினைப்பான். ஆனால் அவன் எப்படிப்பட்டவன் என்பதே வெளிப்பட்டே தீரும். அவன் நெஞ்சத்திற்கும் பேச்சுக்கும் தொடர்பு இருக்காது. நல்லவனாகக் காட்டிக் கொள்வான். ஆனால் தந்திரமாகவே எதையும் செய்வான்.

அவன் ஒரு முட்டாள். முழு மூடன். அவன் மறைத்துப் போலி வேடம் போட்டாலும் அவன் யார், எப்படிப்பட்டவன் என்பது அறிவுள்ளவர்களுக்கு வெளிப்படையாகிவிடும். கேலிக்கு உரியவன் ஆவான். அவன் போட்ட வேடம் கலைந்துவிடும். எப்போதும் அவனைக் காணவே விரும்பாமல் வெறுத்து ஒதுக்கி வைக்கப்படுவான்.

## இயற்கை

இயற்கை ஒன்றே உயிர்ப்பாற்றல் உடையது.

அதுவே படைப்பது. உலகத்தை ஆண்டிடும் எல்லாம் வல்லது; என்றும் நிலைத்திருப்பது; எவர் கண்ணுக்கும் புலப்படுத்துவது.

ஞாயிறு உலகத்திற்கு ஒளி தருவது உண்மை என்றாலும், ஞாயிறு கடவுள் அன்று. செங்கதிர் தான் உலகத்திற்கு வெப்பத்தை தருகிறது என்பது உண்மை. அதற்காக மகிழ்ச்சி கொள். ஆனால்,

தெய்வமாக வணங்காதே. ஞாயிறும் இயற்கை படைத்த ஒரு பொருள்தான்.

இயற்கை ஒன்றே. அதுவே ஆற்றல் வாய்ந்தது. நல் அறிவு படைத்தது. எல்லா நன்மைகளும் செய்வது. வணக்கத்திற்கு உரியது. பெருமைக் குரியது. பாராட்டத் தக்கது. நன்றிக்கு உரியது. இயற்கையைப் புரிந்து கொள்வதே முட்டாள்களை திகைக்க வைப்பது. எதையும் அறிவுக் கூர்மை யுடன் செய்தும், படைத்தும் சீராகச் செயல் படுத்துவது. அது வியக்கத்தக்க முறையில் பலவித மாகப் படைக்கும் ஆற்றல் மிக்கது. இயற்கை நமக்குக் கட்டுப்பட்டதாகும்.

இயற்கை கடைப்பிடிக்கும் வழிமுறைகளே வியக்கத்தக்கவை. புரிந்துகொள்ள முடியாதவை.

எனவே, இயற்கையின் அறிவுக்கு மதிப்பு கொடு. அதனை மண்டியிட்டு வணங்கு.

இரக்கப்பட்டு உலகத்தை அன்புடன் படைத்தது இயற்கை. எல்லா படைப்புகளுக்கும் அழகைக் கொடுத்தது; உணவு அளித்தது. எல்லா உயிர்க்கும் ஏந்துகளைப் படைத்தது. தக்க பாதுகாப்பும் தருகிறது. இயற்கையைப் போற்றிப் பாராட்டிப் புகழ்ந்திரு. நன்றி தெரிவித்துப் பாடு.

இயற்கையின் சட்டங்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். அதனுடைய சட்டங்கள் நல்லவை—உன் நன்மைக்காக வகுக்கப்பட்டவை

நின் தவறுகளுக்கு இயற்கை உடன் தண்டிக்க வில்லை என்று அதனைக் குறைவாக நினைத்து விடாதே. நீயே பெருமை கொண்டு விடாதே. இயற்கை ஏழை பணக்காரன் என்றோ, உயர்ந் தவன் தாழ்ந்தவன் என்றோ பிரித்துப் பார்க்காது.

எனவே, நேர்மையுடன் சிந்தித்து நின் தவறு களைச் சரி செய்து கொள். அருள் உனக்குக் கிட்டும்.

நாளும் அதன் புகழ் பாடு, அதன் வழியில் நட, நீதிக்குக் கட்டுப்பட்டு, நேர்மையுடன் நல்வாழ்வு வாழ; உன் வாழ்க்கையில் மேலும் மேலும் இன்பம் மொய்க்கும். இயற்கை படைத்த ஈடற்ற இன்பம் உனக்கு என்றும் இருக்கும்.

## மனித உடல் அமைப்பு

நீ எளிமையானவன், ஏதும் அறியாதவன், நன்றாகச் சிந்தித்துப் பார். எங்கும் நிறைந் திருப்பது எது? உன்னையே நீ எண்ணிப் பார், உன் அமைப்பை நினைத்துப் பார். வியப்படையத் தக்க வகையில் நீ படைக்கப்பட்டிருக்கிறாய். அதற்காக இயற்கைக்குப் பாராட்டுத் தெரிவித்திடு. அதற்கு மதிப்புக் கொடுத்து மகிழ்ச்சியுடன் வாழு. அதனுடைய செயல்களைக் கவனி.

உனக்கும் ஒரு மனசான்றினை உண்டாக் கியவன் யார்? அது எங்கிருந்து வந்தது? யார்

கொடுத்தது. அந்த மனச்சான்று தசையுமல்ல, எலும்புமல்ல. அரிமாவைப் புழுக்கள் தாம் உண்டு களிக்க போகின்றன என்பதை அரிமா அறியாது. கொலைபடும் கடைக்குத்தான் உரிமை என்பதை ஆடு மாடு அறியாது. அவற்றிற்கும் உனக்கும் நிறைய வேறுபாடு உண்டு. நீ சிந்திக்கும் ஆற்றல் கொண்டவன். அதனால் தான் உன்னைச் சிந்தித்து உணர வேண்டுகிறேன். உயிர் பிரிந் தாலும் உன் உடலுக்கு அழிவில்லை. நீ புரிந்த செயல்களுக்கு அது விடை கூறியாக வேண்டும்.

கழுதை உன்னைப்போல் உண்பதில்லை. ஆனால் அதற்கும் பற்கள் இருக்கின்றன. நீண்ட முதுகு எலும்பு கொண்டிருந்தும் முதலை உன்னைப் போல் நிமிர்ந்து நிற்க முடியாது. உன்னைப் படைத்த இயற்கைதான் எல்லாவற்றையும் படைத்தது. உனக்குத்தான் உயர்வான இடத்தை தந்தது. உனக்குத்தான் மனச்சான்றினைத் தந்தது. எனவே உன்னை நீயே நன்றாகப் புரிந்து கொள். உனக்கு அது தனி மதிப்புகொடுத்திருக் கிறது. அதற்கு ஏற்றபடி நீ மேன்மையுடன் நடந்துகொள். கீழ்த்தரமாகவோ; இழிவாகவோ நடந்து கொள்ளாதே.

உனக்குத் தேவை இல்லாததை அழிக்கவும், உனக்கு வேண்டியதை வளர்க்கவும் வழி செய் திருக்கிறது, உன்னைப் படைத்த இயற்கை.

## புலன்களின் பயன்

பயிர் செய்வதற்கு முன் நிலத்தைப் பண்படுத்த வேண்டும். உன்னைப் படைப்பதற்கு முன் இயற்கை உள்ளது சிறத்தல் என்னும் கூர்தலறம் படைத்திருக்கிறது. உன் உள்ளமே மனசான்றே அதில் சிறப்பானதாகும். உன் உடலே உலக வடிவம் கொண்டது. உன் எலும்புகளே அதைக் தாங்கும் தூண்கள்.

கடல் தண்ணீரில் முகில்கள் உருவாகி, மழையாக மீண்டும் கொட்டி விடுகிறது. மீண்டும் தண்ணீர் ஆறுகள் மூலம் கடலை அடைகின்றன. அதைப்போல் உன் வாழ்வும் உள்ளத்தில் இருந்து தான் தோன்றுகிறது. மீண்டும் அது உன் உள்ளத்தையே அடைகிறது.

மூக்கு நறுமணத்தை நுகர்கிறது. வாய் நல்ல சுவையை நாடுகிறது. ஆனால் எதுவும் அளவுக்கு அதிகமானால் உடல் நலத்தைப் பாதித்து விடுகிறது. எது கெட்டது என்பதை நீ கண்டு அறியலாம்.

உன் மனத்தை உறுதியாக கட்டுப்பாட்டில் வைத்திரு. எல்லாம் சீராகச் செயல்படும். உன் கைகளை நீட்டி உதவி புரிந்திடு. உலகம் உன்னைக் கவனிக்கிறது. வெட்கப்பட வேண்டிய செயல்களைக் செய்யாதே. குற்றமற்றவனாக வாழ்ந்தால் நீ எதற்கும் அஞ்ச வேண்டிய நிலையோ, வருந்த வேண்டிய நிலையோ

ஏற்படாது. மனிதனுக்கு மட்டுமே எதையும் சிந்தித்துச் செயல்படும் ஆற்றலைப் புலன்களின் பயனாகப் பெற முடிகிறது. இயற்கை மனிதனுக்கு அந்த உயர்வான நிலையைத் தந்திருக்கிறது. இயற்கையைப் போன்று உன் குழந்தைகளுக்கு அந்த நல்ல அறிவைப் புகட்டு.

## நெஞ்சம்—அன்பு

உடல் எப்படி நலமாகப் பாதுகாக்கப்பட வேண்டியது இன்றியமையாததோ அதைப்போல உன் நெஞ்சத்தைப் பாதுகாக்க நேர்மையாக வாழ வேண்டும், நீ அறிந்த உண்மை இது. பணிவோடிருந்து நன்றியுடன் நடந்துகொள்.

சிந்தித்தல், புரிந்து கொள்ளுதல், நல்லதை நாடுதல், நல்முடிவுகளை மேற்கொள்ளுதல் ஆகியவற்றில் கருத்துடன் செயல்படு.

அடிக்கடி உன் நெஞ்சத்தை ஆய்ந்து உயர்வான வாழ்வு வாழ்ந்திடு.

கதிரவன் சூடு களிமண்ணைக் கெட்டியாக்குகிறது. மெழுகை உருக்கிவிடுகிறது. அப்படி உன் நெஞ்சம் எதைச் செய்ய வேண்டுமோ அப்படிச் செய்திடு.

நிலவை முகில் இருள் மறைத்தாலும் அதுதன் இயற்கைத் தன்மையை மாற்றிக் கொள்வதில்லை. அது அழிந்துப்போவதும் இல்லை. அதன்

போக்கும் மாற்றம் கொள்வதில்லை. அதன் உடல் நலத்தை அதன் எழிலில் காணலாம். நிலவு உனக்குப் பின்னரும் நீடித்து நிலைத்து இருக்கும். உனக்காகப் பகுடக்கப் பட்டதாகும் அதற்குக் கறையால் பழுது ஏதும் ஏற்படுவதில்லை. இதை உணர்ந்து உன் வாழ்க்கையை நன்கு அமைத்துக் கொள். உன்னைப் படைத்த இயற்கைக்கு எல்லாம் தெரியும். உன் செயல்களை மதிப்பிடுவது இயற்கை.

நடு இரவில் சேவலைக் காண விரும்பாதே. பொழுது விடிந்து விட்டது என்பதை அது கூவி விடுவதால் அதைப் பாராட்ட நினைக்காதே. அரிமாக்களின் காலடிகளைக் கொண்டு மதிப் பிடாதே. அவை எல்லாம் இறந்தால், அதன் நெஞ்சத்தில் ஏதும் நினைவு இருக்காது. உன் நிலை வேறு. நீயே நல்லவற்றைக் கொண்டவன் அவற்றை நல்ல முறையில் பயன்படுத்து.

மான்களின் காதுகள் கூர்மையானவை கழுகுக்குக் கண் பார்வை அதிகம். மோப்பம் பிடிப் பதில் வேட்டை நாய் உயர்வானது. இருந்தும் அவற்றிற்குப் பேசும் ஆற்றல் இல்லை. அவற்றில் எதுவும் எதை ஏன் செய்தது என்று விளக்கம் அளிக்க இயலாது.

மனிதனுக்கு எதையும் விளக்கமாகக் கூறும் ஆற்றலைத் தந்துள்ளது இயற்கை. அது பெரிய செல்வம்.

வெள்ளித் தட்டில் தங்க மணிகள் இருப்பது போல, உன் பேச்சு உயர்வானது. உன் நெஞ் சத்தின் உயர்வை நீ அறிந்து, அதை உனக்கு அளித்த இயற்கையைப் பாராட்டு, அதை என்றும் மதித்திடு. இந்த மேலான ஆற்றல் உனக்கு இருப்பதை மறக்காதே.

எதை நாம் நல்லது என்று கருதுகிறோமோ அதுவே கூடத் தீமையாக மாறக்கூடும். எனவே எதையும் நல்லதற்கே பயன்படுத்து. அதை யாராலும் அழித்து விடவோ, மறைத்திடவோ முடியாது. அது எப்போதும் தானாகவே செயலற்ற தாக்கிவிட முடியாது.

கடும் வெப்பத்தில் பாலை நிலத்தில் பயணம் செய்பவன் தண்ணீரைக் தேடுவது போல உன் மனமும் எப்போதும் நல்ல அறிவைத் தேட வேண்டும்.

எது சரி, எது சரியில்லை என்று கண்டு கொள்ள முடியாதவனுக்கு இந்த அறிவைக் கொடுத்திருப்பது, அறிவிலியிடம் கூர் வாள் கொடுத்திருப்பது போல் ஆகும்.

நீ எதிலும் உண்மையைத் தேடவேண்டும். எது குற்றம் என்பதைக் கண்டிட வேண்டும். இதை எல்லாம் புரிந்து கொண்டு நடக்கும் நிலையில் உன்னைப் படைத்த இயற்கையை எண்ணு.

## பிறவியின் பயன்

குயிலுக்குக் காலையையும், ஆந்தைக்கு இரவை போலவும், கழுகுக்குப் பிணத்தைப் போலவும் உன் வாழ்விற்கு உள்ளமும் தொடர்பு கொண்டிருக்கிறது.

அது ஒளி நிரம்பியது. இருக்குமிடம் தெரியா விட்டாலும் மிகவும் பிடித்தமானது; இனிமையானது. இருந்தும் அதனுடைய உண்மையான மதிப்பை எவர் அறிவர்!

அதற்கு உரிய அக்கறை செலுத்தி நல் அறிவைப் பெற்றிடு. உன் அறிவைக் கண்டு நீயே மெச்சிட வேண்டா. அதைப் பிறருக்கு அளித்து மகிழ்ச்சியைக் கொள். நீ வீணாக்கும் நேரத்தை மீண்டும் பெற முடியாது. எனவே, திருந்தி வருங்காலத்தை நன்றாக அமைத்துக் கொள்.

ஏன் பிறந்தோம் என்று கவலைப் படாதே. விரைவாக சாவு வராதா என்றும் மனம் நொந்து கொள்ளாதே. நல்லது நின் கையில்தான் உள்ளது. நின் முடிவு நல்லதானால் நல்லபடியே நடக்கும். நீ பிறந்தது இதுவே முதல் முறையல்ல. நீ மீண்டும் மீண்டும் செத்துப் பிறக்க வேண்டியவன். பறவைக்குக் கூண்டில் அகப்படுவோம் என்பது தெரியாது. பறவை தப்பிக்கக் கூட்டின் கம்பிகளில் மோதிக் கொண்டு இறப்பதும் இல்லை. எனவே நீயே நின் நிலையைக் கண்டு வருந்தாமல், நின் எல்லைக்குள் வாழ முடிவு செய்து கொள்.

நினக்கு அமைந்த நிலையைப் புரிந்து கொண்டு வாழ வேண்டும். இன்பத்திற்கும் துன்பத்திற்கும் ஈடு கொடுத்து வாழ்ந்திடு.

எளிய படுக்கையில் உறங்குவது நல்லது. மலர்ப்படுக்கையில் உறங்குவது நல்லது. மலர் படுக்கையில் உறங்கும்போது, அந்தப் படுக்கையில் முட்கள் இருப்பதைக் கவனத்தில் கொண்டிரு.

செல்வனாக வாழ்வதைவிட, எளிய நல்வாழ்வு வாழ்வது மேலானது. நேரமில்லையே என்று கவலைப்படாதே. நின் காலமே குறுகிக்கொண்டு வருவதை நினைத்திடு.

வாழும் காலத்தில், குழந்தைப் பருவம், முதிய பருவம், உறக்கம் பிணியால் அவதியுறும் காலம், ஏதும் சிந்திக்காது சோம்பிச் செலவிடும் காலம், ஆக இதை எல்லாம் கணக்கிட்டால் நீ வாழும் காலம் மிக மிகக் குறைவு என்பதை மறந்துவிடாதே.

நின்னைப் படைத்த இயற்கைதான் நீ வாழும் நாள்களைக் குறைத்து வருகிறது. அதிக நாள் வாழ்வது நினக்கு என்ன சிறப்பு? எனவே, தீமையை விட்டு விலகிச் சீராக வாழ முற்படு.

ஓர் அலைக்குப் பின் தொடர்ந்து மற்றோர் அலை வருவது போல உள்ளம் உரை செயல் கெட்டால் கேடுகள் தொடர்ந்தே வரும்.

சாவைக் கண்டால் முட்டாள் பயப்படுவான். தான் இறக்கப் போவதில்லை என்று ஆசைகளை அதிகமாக்கிக் கொள்வான்.

இளைஞனாக இருக்கும்போதே ஒழுக்கங் களைக் கடைப்பிடித்து வாழக் கற்றுக் கொண்டால் நினக்கு மேன்மையும் மதிப்பும் ஏற்படும்.

## தற்பெருமை

மனிதனின் நெஞ்சத்தில் தற்பெருமை அதிக வலிமை பெற்று விளங்குகிறது. தன் அடக்கம் இல்லாதவனின் நிலையைக் காட்டுகிறது. தற்பெருமை கொண்டவனின் வாழ்க்கை கனவாக முடியும்.

இன்றுயுள்ள நிலையையுணராத நிலையில் உயர்ந்தவனாக வாழ நினைப்பது பயன் தராது. அன்று நீ எந்த நிலையில் வாழ்கிறாயோ, அதற்கு ஏற்ற முறையிலேயே உன் எதிர்கால வாழ்வும் அமையும். இன்றைய வாழ்க்கையை நன்கு அமைத்துக் கொள்ள வேண்டும்.

தற்பெருமை உன் கண்களைக் குருடாக்கும். உன் நெஞ்சத்தை மறைத்து விடும். உன்னை நீ கண்டுகொள்ள முடியாத நிலையில், உன்னைப் பிறர் எளிதாகப் புரிந்து கொள்வார்கள்.

தற்பெருமை கொண்டவனின் நெஞ்சம் எப்போதும் சஞ்சலத்தில் இருக்கும். நுகரும் நலத்தைவிட நீ பல கவலைகளுக்கு ஆளாக நேரிடும். வீண் ஆகுலமாக நடந்து கொள்பவன் முடிவு இரங்கத்தக்கதாய் அமையும். ஆகுலத்தில்

மூழ்கியவன் நிறைவடைய முடியாது. தன்னைப் பிறர் புகழ வேண்டும் என்பதற்காகவே எதையும் செய்வான்; நீ நல்ல முறையில் வாழ முற்படு. உன் வாழ்க்கைகளைப் பற்றிப் பிறர் என்ன கருதுகிறார்கள் என்பதைப் பொருட்படுத்தி வருந்தாதே. உன் வாழ்க்கையில் மன நிறைவு வேண்டும்.

பட்டாம் பூச்சிக்குத் தன் அழகு புலப்படாது. மல்லிகை தன் மனத்தை நுகர்ந்திடுவதில்லை அதைப்போல மனிதனும் தன்னைச் சுற்றியுள்ள இன்பத்தைப் பிறர் அறிய விடுவதில்லை.

நினக்குப் பட்டாடையும், தங்க அணிகளும். இருப்பது ஏன்? ஆடையில்லாதவர்க்கு உடை கொடு, ஏழைகளுக்கு உதவி செய். பசியால் வாடுபவர்களுக்கு உணவு கொடு. ஏழைமையும்— வறுமையும் பசியும் இல்லாத நிலையையுருவாக்கு. அப்போதுதான் நின்னைப் பாராட்டுவார்கள். அப்படிப்பட்ட பாராட்டே உயர்வானது.

உள்ளத் தூய்மையோடு சிந்தித்தும் பேசியும் செயல்படு. அப்போதுதான் உன் சொல்லுக்குப் பிறர் மதிப்புக் கொடுத்துப் பணிவார்கள். போற்றத்தக்கவன், பாராட்டத்தக்கவன் என்று மக்களிடம் நற்பெயரை நிலை நாட்டிக் கொள்.

## ஒவ்வாமை

மாறுபட்ட நிலைகளைப் பொருத்தமற்று இயற்கை நினக்குண்டாக்குகிறது.

எதையும் தெளிவாக அறிந்து கொள்ளாத நிலையில்தான் நீ பிறந்தாய். மாற்றங்களுடன் கூடியதே உன் வாழ்க்கை. அதனால்தான் நீ உறுதியாக இருப்பதற்கு இல்லை. உனைப் பெற்றவர்கள் உனக்கு உடலைத்தான் தந்தார்கள். உலகுதான் உனக்கு மன உறுதியைத் தந்தது. இதை உணர்ந்து நீ அறிவாளியாக வேண்டும். அப்போதுதான் நீ வாழ்க்கையில் மகிழ்ச்சியாக இருக்க முடியும்.

பெருமைக்குரிய அருஞ்செயல் புரிந்துவிட்டுப் பெருமையடைபவர்கள், அது தன் திறமையால் தான் என்று கருதாதே. உனக்கும் புலப்படாத நிலையில் சமூகச் சூழலின் அருள்தான் சிறப்புக் காரணம் என்பதைத் தெரிந்து கொள். எதிர்பாராத நிலையில் உனக்கு அருள் புரிந்த இயற்கையை—சமூகத்தைப் போற்று. தயக்க நிலையிலேதான் உன் செயல்களை நீ மேற்கொண்டாய் என்பதை மறந்து விடாதே.

சிந்திக்கும் திறனைக் குறை கூறாதே. மாறுபட்டு நீ நடப்பதற்கு எது காரணம்? நீ உறுதியான எண்ணத்தை ஏற்படுத்திக் கொள்ளாதது யார் குற்றம்?

சிந்திக்கும் மனிதன் மாறுபடுகிறான். தீய முறையில் நீ நடப்பதும், அடிக்கடி மாறுபட்ட நிலையினை அடைவதும் மறையவேண்டுமானால்

நீ சிந்திக்க வேண்டும். எது சரி, எது நல்லது, எது விரும்பத்தக்கது என்பதை நீ சிந்தித்துச் செயல்படாததே சீரழிவுக்குக் காரணம்.

நீ இப்படித்தான் நடந்துகொள்ள வேண்டும், இதுவே சரியான பாதை என்பதை உணர்ந்து பின்னர் முடிவுகளை மேற்கொள்ள வேண்டும்.

உன் மனத்தின் முடிவுக்கு எதிராக நீ செயல்பட்டால் உனக்கு அமைதி கிடைக்காது. உன் உலக வாழ்க்கை ஒரே வகையில் இருக்காது. உன் எண்ணங்களும் மாறும். காலத்திற்குக் காலம் ஏற்ற முறையில் மாற்றங்களும் மாறி அமையும்.

இன்று உன்னை விரும்புபவனே, நாளை உன்னை வெறுத்திட நேரும். எதனால் முன்பு சுவைத்ததை இப்போது வெறுக்கிறோம் என்பதே உனக்குப் புரியாது.

இன்று கொடுங்கோலனாக இருப்பவன் நாளை நல்லவனாக மாறக்கூடும்.

இன்று வளம் பெற்றவன் நாளை வறுமையால் இடர்படக்கூடும்.

பச்சோந்திக்கு ஒரு நிலையான நிறம் ஏது? மனிதனின் வாழ்க்கை என்ன? காலையில் களிப்புடன் கண் விழித்தவன், பகலில் கண் கலங்கக்கூடும். ஒருவேளை சிரிப்பவன் மறுவேளை அழுதிடக்கூடும். இன்று அறியாதவனாக இருப்பவன், நாளை அறிவாளியாகக் கூடும்.

எனவே, துன்பமும் இன்பமும் நிலையற்றவை மாறக்கூடியவை.

பொறுமையாக, உறுதியாக, அமைதியாக உன் பயணத்தை மேற்கொள்ள வேண்டும். தடைகளைக் கண்டு தளர்ந்துவிடக் கூடாது. உன் பாதையில் மலையே குறுக்கிட்டாலும் மறைந்து விடும். கடல் குறுக்கே வந்தாலும் வற்றிவிடும். புலியே வந்தாலும் வேறு திசையில் புகுந்துவிடும். எங்கும் நீ அச்சமின்றி நடமாடலாம். சாவையும் உன் கையினால் ஒதுக்கலாம், புயல் வீசிடினும் உனக்குக் கவலை இல்லை. இடியும் உன் தலையில் விழாது. மின்னலும் தன் அழகைத்தான் காட்டமுடியும்.

இதற்குப் பெயர்தான் உறுதி. அந்த உறுதி மனப்பான்மை எங்கிருந்தோ (உள்ளிருந்து) உனக்கு ஏற்படும். அந்த உறுதி மகிழ்ச்சி தரும். அது கோள்களுக்கு அப்பாலுள்ள குறிக்கோளில் குடி கொள்ளும், உன்னை ஊக்குவிக்கும். அது நின்னிடம் நிலையாக இருக்கும். அந்த நிலையை அடைந்து மகிழ்ச்சியுடன் வாழ்ந்திடு.

## பலவீனம்

வீணாக அடிக்கடி மாற்றம் கொள்பவனுக்குப் பலவீனம் குறையாகவே இருக்கும். நிலையாக இருக்க நீ முடியாததற்கு இந்தப் பலவீனமே

காரணம். உறுதியற்றவனுக்குத் தற்பெருமை கூடவே இருக்கும்.

உனக்கு எதில் திறமையும் வல்லமையும் இருக்கிறதோ அதில் முன்னேறு. ஆசைகளை உருவாக்கிக் கொள்வதே பலவீனத்திற்கு அடிப்படை. நீ விரும்பியது எதுவானாலும் அதில் உனக்குக் கிடைத்த வெற்றியைக் கண்டு மன நிறைவு கொள்ள வேண்டும். பெறமுடியாததை எதிர்காலத்தில் பெற்றிடுவோம் என்று ஆசை கொள்ளாதே. எப்போதும் உழைப்பால் கிடைத்ததைக் கொண்டு நிறைவடைவதே மகிழ்ச்சிக்கு வழி. நேர்மையும் ஒத்திணைவும் அற்ற உன் விருப்பத்திற்கு எல்லாம் இயற்கை ஒத்துழைக்கும் என்று நம்பிக்கை கொள்ளாதே. எப்போதும் முயற்சி இன்றி இன்பம் உன் காலடியில் விழுந்து கிடக்காது. புதுமைகளைக கண்டு களிப்பதற்கே நீ விருப்பம் கொள்வாய். ஆனால் நீ விரும்புவது என்று உன்னுடன் நிலைத்திருப்பதாக இருக்க வேண்டும். நல்லதை இழந்தால் நீ வருந்துகிறாய். ஆனால் அது உன்னுடன் இருந்தபோது அதை நீ புறக்கணித்து விட்டாய்.

நீ அடையும் வெற்றியைக் கண்டு மகிழ்கிறாய். பிறகு அதை ஏன் விரும்பினோம் என்று கவலைப் படுகிறாய். அப்படிச் செய்வதும் உன் குற்றமில்லை. வாழ்க்கைச் சூழ்நிலையே அதற்குக் காரணம்.

நல்லவற்றை நாம் தவறாகப் பயன்படுத்தும் போது அவற்றை இழக்கிறோம். இனிமையாகத் தென்படுவதும் கசப்பாகி விடுகின்றன. அதனால் வலியும் வேதனையும் இன்பமற்றுத் துன்பத்தில் முடிகின்றன.

எனவே எதையும் சீராக நல்ல முறையில் பயன்படுத்து. காதல் இன்பம் பெறத் துடித்து, வெற்றிகண்ட பிறகு வருந்துவதும் வெறுப்பதும் எதிர்பார்க்கக் கூடியதுதான். உன் வாழ்க்கைத் துணைவியிடம் நல்லுறவு கொண்டு அவளைப் போற்றிப் பாராட்டி உன் இன்பத்தை நிலையானதாக அமைத்துக்கொள். அப்போதுதான் காதல் வாழ்வில் குழப்பமோ, சண்டை சச்சரவுகளோ இல்லாமல் அமைதியுடன் வாழ முடியும்.

இயற்கை உனக்கு நல்லதைத் தரும்போது அதனுடன் அல்லதையும் கலந்துதான் தருகிறது. அதே நேரத்தில் கேட்டைத் தவிர்த்துக்கொள்ளவும் உனக்கு வழி வகுத்திருக்கிறது. இன்பத்துடன் இணைந்திருப்பதே துன்பம். துன்பத்திலும் இன்பம் கலந்திருக்கிறது. மகிழ்ச்சியும், துக்கமும் ஒன்றுதான். நாம்தான் விழிப்புடன் வேண்டியதை அமைத்துக் கொள்ள வேண்டும்.

கவலைப்படுவதிலும் இன்பம் இருக்கிறது. அளவு கடந்த மகிழ்ச்சியில் கண்ணீரும் கலந்திருக்கிறது.

முட்டாளின் கைகளில் சிக்கிய நல்லவை அழிகின்றன. அறிவாளிகள் அல்லனவற்றைக் கூட நல்லனவாக மாற்றக் கூடியவர்கள்.

எனவே பலவீனமும், பலமும் உன்னிடம் கலந்திருப்பதை நீ மறந்து விடாதே.

உயர்வான ஒழுக்கங்கள் பல உயர்வானவர்களிடம் பகிர்ந்து காணப்படுகின்றன. உன் கைக்கு எட்டாததை விரும்பாதே. அதெல்லாம் உனக்குக் கிடைக்கவில்லையே என்று வருந்தாதே.

அறிவுடைய செல்வர்களின் தாராள குணம் உனக்கு உடனே வந்து விடுமா? வறுமையில் ஏழைகள் மனநிறைவு கொள்வதுபோல் உன்னால் முடியுமா? விதவையிடம் உள்ள பட்டறிவு உன் மனைவிடம் காணப்படவில்லை என்றால் அவளை நீ வெறுத்து ஒதுக்க முடியுமா? பிளவுபட்டிருக்கும் நாட்டில் உன் தந்தையும் ஈடுபாடு கொண்டால், அவரை நீ காப்பாற்ற முடியுமா? நீ கடமையுடன் செயல்படுவதன் மூலமே அவரைக் காக்க முடியும்.

உண்மை எப்போதும் ஒன்றுதான். ஐயப்பாட்டினை உண்டாக்கிக் கொள்பவன் நீயேதான். எப்போதும் உன் மனச்சான்றுக்குக் கட்டுப்பட்டு நட. உனக்கு எல்லாம் நல்லவையாய் நடக்கும்.

## குறையறிவு

அழகானவை, விருப்பத்தை உண்டாக்கக் கூடியவை எல்லாம் மனிதனால் அடைய முடியுமா என்பதைக் கண்டறிவதே நுண்ணறிவு.

மனிதனுக்குத் தீயவை தேவை இல்லை. கெடுதிகளைத் தாங்கிக் கொள்ள வேண்டிய இன்றியமையாமை இல்லை. இருந்தும் பல சட்டங்கள் மூலம் பல தீமைகள் உண்டாகின்றன. பல தீர்ப்புகள் குற்றங்களை வளர்த்து வருகின்றன.

அதிகாரிகள் நாட்டைப் பாதுகாக்க வேண்டியவர்கள். ஒரு குற்றமற்றவன் தண்டிக்கப்படுவது, பத்துப்பேர் தப்பித்துக் கொள்வதைவிட இழிவானது. மக்களின் எண்ணிக்கை மிகும்போதும் மிகையாகப் பிள்ளைகளைப் பெற்று விட்டாலும் வாளின் மூலம் வாழ்வளிக்க முடியாது. யார் உயிரையும் பறித்து வாழ்வைத் தேடிக் கொள்ள இயலாது.

அறத்தை நிலை நாட்டத் தவறுகள் செய்தே தீரவேண்டும் என்று வாதாடாதே. துன்புறுத்துவதன் மூலம் குற்றவாளி உண்மையை வெளிப் படுத்தி விடுவான் என்று நினைப்பது தவறாகும். அப்படிச் செய்தால் நீயும் குற்றவாளியாகி விடுகிறாய்.

ஐயப்பாடு ஏற்பட்ட ஒரே காரணத்திற்காக யாரையும் கொடுமை செய்திடாதே. அதன் மூலம்

நீ ஏதும் அறியாத ஓர் அப்பாவியைக் கூடத் துன்புறுத்தியவன் ஆகிவிடுவாய்.

வீணாகக் கடுமையாகத் தொல்லைப்படுத்துவதன் மூலம், குற்றம் செய்யாதவன் கூடி, வலிமையும் கடுமையையும் தாங்க முடியாத நிலையில் எதையாவது இட்டுக்கட்டி உண்மையாகக் கூறக்கூடும்.

ஒருவனைச் சாகடிக்க வேண்டும் என்பதற்காக ஏதாவது காரணத்தைத் தேடிக் கண்டு பிடிக்காதே. அதைவிட அவனை நேராகச் சாகடித்து விடுவதே நல்லது.

அறத்தை நிலைநாட்டுபவர்களுக்கு உண்மைகளைக் கண்டறியும் ஆற்றல் இருக்க வேண்டும். உண்மை சில நேரங்களில் பகைமை உண்டாக்கும்; எதிரிகளை ஏற்படுத்தும். இருந்தும் உண்மையை மனிதன் நாடுவதே இயற்கை. உண்மை வெளிப்படும்போது சில நேரங்களில் அச்சமும் உண்டாகலாம். அது உண்மையில் குற்றமில்லை. அது உன்னுடைய குற்றமே. நின் குற்றங் குறைகளை நீ உணர்வதற்காகவே சிந்தனை உண்டாக்கப் பட்டது. இயற்கையுணர்வே உனக்கு நல்லதைச் செய்யக் கூடியது. உன் உடல் வெறும் தூசி, சாம்பல். எவன் ஒருவன் தன் குற்றத்தை முதலில் உணர்கின்றானோ அவனே பிறரைக் காத்திட முடியும், சீர்படுத்தமுடியும்.

## துன்பம்

அன்ப, நீ முழுவதும் நல்லதைக் கொண்டவன் அல்லன். நின்னிடமும் குறைகள் உண்டு. நீ மகிழ்ச்சியுடன் உறுதியாக இருக்கலாம். உனக்கும் துன்பம் நேரும். அது இயற்கை. துன்பம் எப்படி நேரிருகிறது? எல்லாம் உன் உணர்வின் விளைவாகத்தான் ஏற்படுகிறது என்பதைப் புரிந்து கொள்.

நீ துயரச் சூழலில் பிறவி எடுக்கவில்லை. உன் அழிவிலும் ஒரு சிறப்பு இருக்கிறது. இந்த உலகத்தில் நல்லதற்கு உரிய மதிப்பில்லை. உன்னைப் பெற்றவனே கூட வெட்கப்பட வேண்டிய நிலை ஏற்படலாம். ஆயிரம் உயிர் களை அழித்தவனையும் பாராட்டும் மக்கள் இருக் இருக்கிறார்கள். வெட்கப்பட வேண்டியவர்கள் வெட்கப்படுவதில்லை. பாராட்டப்பட வேண்டிய வர்கள் பாராட்டுப் பெறுவதில்லை.

பிறப்பது ஒரே வழியில்தான் அனைவரும். அழிவதிலேயே ஆயிரம் வழிகள் உள்ளன.

பிறருக்குக் கொடுத்து உதவி செய்பவனை மதிப்பார் இல்லை. பல கொலைகளுக்குக் காரண மாக இருப்பவனுக்கு வெற்றிகளும் விருதுகளும் பரிசாகக் கிடைக்கின்றன.

பெற்ற மழலைகள் மூலம் பல நன்மைகளை அடைபவர்களும் உண்டு. பிறந்தவர்களை மடியச் செய்பவன் எதையும் நுகர்வதில்லை.

பெற்ற மகனையே வெறுப்பவன் அநாகரிகமானவன். தந்தையின் சாவை வரவேற்பவன் மாந்தன்மையற்றவன்.

மனிதனுக்குப் பல கேடுகள் உள்ளன. வருந்துவதன் மூலம் கேடுகள் அதிகமாகின்றன. எல்லாக் கேடுகளைவிட துன்பமே பெரிது.

அது உலகத்திற்கே பொதுவானது. மகிழ்ச்சி ஒரு விருந்தாளியைப் போல வரும்போதும் துன்பத்தைக் கடந்து இன்பமாக எப்போதும் வாழ ஆசைப்படு.

மகிழ்ச்சி ஒவ்வொன்றாக வரும். துன்பம் விரைவாகப் படைபோல வரும்.

வைக்கோல் தீயில் விரைவாக மறைந்து விடும். இன்பமும் அப்படியே. பெற்ற இன்பம் எங்கே என்று தவிக்க நேரிடும். கவலைகள் அடிக்கடி தோன்றும். மகிழ்ச்சி எப்போதோ தோன்றும். வலியும் வேதனையும் தாமாக வரும். இன்பத்தைத் தேடித்தான் பெறவேண்டும். அறவழியில் வரும் இன்பம் நிலைக்கும்.

எதையும் சிந்தித்துப் பார்க்க மனிதன் கடமைப்பட்டவன். மகிழ்ச்சியில் மூழ்கிக் கிடப்பவன் இதை மறந்து விடுகிறான்.

துன்பம் வரும் என்பதையும் மனிதன் அறிவான். துன்பம் எப்போது நீங்கியது என்பதையும் அறிவான். வேதனைக்குரிய செயலில் ஈடுபடும்போது அதை நினைக்க மறந்து

விடுகிறான். தனக்கு வலி ஏற்படும்போது வருத்தப்படுகிறான். பிறருக்கு வலியை உண்டாக்கும்போது சிந்திக்க மறுக்கிறான். தீதும் நன்றும் பிறர்தர வாரா.

## தீர்ப்பு

எதையும் சீர் தூக்கிப் பார்த்து முடிவுகளை மேற்கொள்ள மனிதன் ஆற்றல் படைத்தவன். அந்த ஆற்றலைத் தவறான செயல்களுக்குப் பயன் படுத்தாதவன் மகிழ்ச்சியடைகிறான்.

கொட்டும் புயல் மழையில் மலை மீதுள்ள செல்வம் அழிக்கப்படுவதைப் போல், பொது மக்கள் தீர்ப்பு ஞாயத்தையும், அறமுறையையும் அழித்து விடுகிறது. உண்மையை முழுமையாகப் பெற முனைய வேண்டும். உண்மையின் சாய லைக் கண்டு முடிவுகளை மேற்கொள்ளக் கூடாது. அதனால் தவறான தீர்ப்பு கூறவேண்டிய நிலை ஏற்படலாம்.

உன்னுடைய தீர்ப்புக்கு மாறுபட்ட கருத்தைக் கூறுபவர்களைக் குறை கூறக் கூடாது. இரண்டு முடிவுகளுமேகூடத் தவறானதாக இருக்கலாம். பட்டங்களைப் பெற்றிருப்பதால் மட்டுமே அவன் கூறும் தீர்ப்பு சரியானது என்று மதிப்பிட முடியாது. எதிரியைப் பழிவாங்கும் எண்ணத் துடன் சமயத்தைப் பயன்படுத்திக் கொண்டு எதிரியைக் கொன்று விடாதே.

உன் தாயார் அடங்காப்பிடாரியாக இருந்தாலோ, உன் மனைவியிடம் குறை காணப்பட்டாலோ, நீ அதற்காக வருத்தப்பட்டுப் பயன் இல்லை. மற்றவர்கள் புரிந்திடும் குற்றம் குறைகளுக்கு நீ எப்படிப் பொறுப்பாளி?

உன்னிடம் உள்ள தங்க நகைகளைப் புறக்கணிக்காதே: பிறரிடம் இருப்பதை உயர்வாக மதிக்காதே.

உனக்கு அதிகாரம் இருப்பதாலோ, உயர் நிலையில் இருப்பதாலோ, மனைவியைக் குறைத்து மதிப்பிடாதே. அவளை நீ அடைய யது காரணம்? அவள் நின்னிடம் கொண்ட நம்பிக்கையல்லவா? உன்னை ஒழுக்கமுடையவன் என்று அவள் தன்னை ஒப்படைத்துக் கொண்டதை மறக்காதே. நீ அவளை உண்மையாக விரும்பி அடைந்திருந்தால், நீ அவளைப் புறக்கணிப்பது கண்டு நின் உள்ளமே வருத்தப்படும்.

உன் நண்பனுக்கு ஏற்பட்ட இழப்பை அவன் கண்ணீர் விடுவதைத் கொண்டு மதிப்பிட இயலாது. அதைவிட அதிகமான இழப்பை அவன் அடைந்திருக்கிறான். அதை அவன் வெளிப்படுத்திக் கொள்ள வழி இல்லை.

ஆரவாரமாக நாலுபேருக்குத் தெரியும்படி செய்யப்படும் செயல்களை அதிகமாக மதிப்பிட்டு விடாதே. நல்ல பல பெரிய செயல்கள் ஓசையின்றி நடைபெறும்.

ஒருவன் செய்திடும் நல்ல செயல்களுக்குப் போலி காரணங்களைக் கற்பித்து விடாதே. உலகம் அவனைச் சரியாகப் புரிந்து கொள்ளும்; நின் பொறாமையும் வெளிப்பட்டு விடும்.

புகழுரைகள் செவிகளை மகிழ்விக்கும், அமைதி நெஞ்சத்தை மகிழ்விக்கும்.

அன்பு செலுத்த அதிகம் ஆர்வம் காட்டு, வெறுப்பு கூடாதது, நின்னைப் பிறர் உவந்தேற்க இதுவே வழி.

பாராட்ட வேண்டியதை உடனே பாராட்டு. கண்டிப்பதற்கு விரைவு காட்டாதே. நல்லதைச் செய்வதற்குத் தயங்காதே. தீமை செய்யவதைத் தவிர்த்து ஒதுக்கிவிடு. நேர்மையாகச் சிந்தித்து முடிவு செய்த பின்னர் எவ்விதத் தயக்கமும் கொள்ள வேண்டா. அறிவாளிகள் நின்னைக் குறை கூறினால் அதை வரவேற்பாய்; குறைமதி படைத்தோர் கைதட்டி ஆரவாரம் செய்தால் மயங்கிவிடாதே.

நினக்குத் தகுதி இல்லாத பதவியை வநிக்காதே. அந்தப் பதவிக்குத் தகுதி படைத்த வர்களின் ஏளனத்திற்கு ஆளாக நேரிடும்.

நெஞ்சுக்குச் சரியாகத் தெரியாததைப் பிறருக்குப் புகட்டாதே.

மாற்றார் நலமாக முன்னேறி இருப்பதைக் கண்டு பொறாமைப்படாதே. நின் எதிரிக்குக்கூட

நல்லதையே நினை. பகைவர்கள் துன்பப்படுவ தைக் கண்டு மகிழ்வு அடையாதே.

எல்லோருக்கும் நல்லதையே செய். அனை வரின் அன்புக்கும் உரியவனாக இரு.

## ஊகித்தல்

இழிவும், இருமாப்பும் விரும்பதக்கதல்ல. இத் தகாத குணங்கள் இருப்பது இடர்ப்பாட்டில் முடியும்.

ஊகித்தல் என்பதே சிந்திகசும் ஆற்றல் குறைந்திருப்பதைக் காட்டுவதாகும். ஊகித்தல் பல வேளைகளில் தவறுகளுக்கு வழி வகுக்கும்.

தன்னைப்பற்றி ஒருவன் மீவுயர்வாகவே கருதிக் கொள்வோன், பிறரை இழிவாகவோ தாழ் வாகவோ மதிப்பிடுவான்.

மூட நம்பிக்கையும், போலி பத்தியும் நாம் அறியாததை ஆய்வு செய்யும்போதும் ஏற்படு கின்றன.

உயிர்ப்பாற்றல் (Life force) இல்லை என்று கூறுபவன் இடியை எதிர்த்து நிற்பவன்.

உயிர்ப்பாற்றலின் அருள் பெற்றவன் நான் என்று பெருமையாகப் பேசுபவன், இயற்கை யைப் போற்றிப் புகழ்ந்து, ஒன்றி வருவதில் தவறக் கூடாது.

வையகத்தையும், இன்பத்தையும் தனக்காகவே இயற்கை படைத்திருப்பதாக மனிதன் நினைக்கிறான். அனைத்தும் தான் சுவைத்து மகிழ்வதற்காகவே படைக்கப்பட்டதாக நினைக்கிறான். அப்படி நினைப்பது தவறு; முட்டாள் தனம் கோடான கோடி மக்களைப் படைத்த இயற்கை அனைத்தையும் அனைவருக்காகவே படைத்திருக்கிறது.

உன் நலனுக்காக நீ மற்றவர்களைத் துன்புறுத்துவது கூடாது என்பதைப் புரிந்துகொள். நிலவுலகைப் படைத்த இயற்கை எல்லோருக்கும் வாழ்க்கை நெறிகளையுண்டாக்கி இருக்கிறது. எல்லோரையும் காக்கும் பொறுப்பு அதனுடையது. அதில் குறுக்கிடாதே. இயற்கை விதிகளை மீறி நடக்காதே.

எந்த ஓர் உண்மையும் ஒரே வடிவத்தில் புரிந்து கொள்ளக் கூடியது இல்லை. அதனால் எதையும் ஊகித்து ஒரு முடிவுக்கு வந்து விடாதே.

## மனிதன் பற்று

செல்வத்திற்குத் தனி மதிப்புக் கொடுத்து, தனக்கு மட்டும் செல்வம் வேண்டும் என்று மனிதன் நினைப்பது அறத்துக்குப் புறம்பானது. எல்லாரும் எல்லாம் பெறவேண்டும். இல்லாமை ஒழியவேண்டும். இன்ப வாழ்வு பொது.

அளவுக்கு மீறி அதிகமாகச் செல்வத்தை அடைய வேண்டும் என்று ஆசைப்படுவது நஞ்சை நாடுவதாகும். அது எல்லாவற்றையும் அழித்துவிடும். அந்த ஆசை ஏற்பட்டால் நல்லொழுக்கம், நேர்மை, பற்று, அன்பு எல்லாம் போய்விடும்.

பணத்திற்காகச் சிலர் தங்களையே விற்பார்கள். இன்பத்தைக் கொடுத்துத் துன்பத்தைப் பெற்றுக் கொள்வார்கள். தங்க நகைகளுக்காக ஆசைப்பட்டுத் தன் வீட்டை விற்பவன், தன் அமைதியைக் கொடுத்து விட்டுக் கவலைகளைத் தேடிக் கொண்டவன் ஆவான்.

செல்வத்தைவிடச் சிறந்தது நல்லொழுக்கம்; மனிதன் தனக்கு எவ்வளவு தேவையோ அந்த அளவிற்கே ஆசைப்பட வேண்டும். அதுவே, நிறைவான நல்வாழ்வு. அதிகமாகப் பணம் சேர்ந்தவன் துன்பமடைவதைக் கண்டு அறிவு பெற்றிடு. பேராசை வீட்டையும் நாட்டையும் கெடுக்கும் நஞ்சு.

தங்கம் விரும்பத்தக்கதில்லை என்பதால் மண்ணுக்குள் அடியில் மறைக்கப்பட்டிருக்கிறது. வெள்ளி இருக்குமிடம் தெரியாமல் காலால் மிதித்து செய்கிறாய். இதிலிருந்து நீ கவர்ச்சியானவை மீது பற்றார்வம் கொள்ளக் கூடாது என்பதைப் புரிந்துகொள்.

நிலத்தின் மேல் பலநல்லவை இருக்கின்றன. உனக்குச் செல்வமாகத் தோன்றுவது மண்ணின்

வயற்றில் புதைந்திருக்கிறது. உனக்குத் தேவை மூலிகைகள், கனி வகைகள், உணவுப் பொருள்கள் மண்ணின் வயிற்றில் மறைக்கப்பட்டு இல்லை.

அறிவாளிக்குச் செல்வம் ஓர் அடிமை. செல்வத்திற்கு அவன் அடிமையாக மாட்டான். செல்வத்தைப் பிறருக்குக் கொடுத்து உதவாதவன், பிணியால் பீடிக்கப்பட்டு அல்லல்படுவான்.

தங்கத்தால் எத்தனை கோடி பேர் அழிந்தார்கள்! செல்வம் ஒழுக்கத்தை உண்டாக்க முடியுமா? பூரியர்களிடம் இருப்பது செல்வம். நீ அந்தச் செல்வத்தை விரும்புவதால் என்ன மேன்மையைத் தேடிக்கொள்ளப் போகிறாய்?

நீ செல்வத்தைச் சேர்க்க அதிக ஆசைகொண்டால் பிறருக்கு அதைப் பகிர்ந்து கொடு. பிறரை மகிழ்விப்பதில்தான் உனக்கும் பெருமகிழ்ச்சி உண்டாகும்.

செல்வத்தை யாருக்கும் தெரியாமல் பதுக்கி வைப்பதால் ஒரு பயனும் இல்லை. செல்வத்தைப் பயன்படுத்தாமல் முடக்கி வைப்பவன். ஏழைகளின் வளத்தைச் சூறையாடுபவன்.

செல்வத்தை உரிய முறையில் செலவிடத் தயங்குபவன் நல்லனவற்றைப் புறக்கணிப்பவன். தன் மகிழ்ச்சியையே குறைத்துக் கொள்பவன்.

செல்வம் இல்லாமல் வாழ்வது ஒன்றும் கடினமில்லை. பெரும் செல்வத்தோடு வாழ்வதும் எளிதில்லை.

உழைக்கும் ஏழையால் தன்னை எளிதில் கட்டுப்படுத்திக்கொள்ள முடிகிறது. மிகுதியான செல்வம் படைத்தவனுக்குத் திண்டாட்டங்கள், கவலைகள் அதிகம், இரக்கமற்றவனாக, அன்பற்றவனாக, அறிவற்றவனாக வாழ்வது ஒரு பெரிய சமூகக் குற்றம். ஆம்; செல்வர்கள் அப்படித்தான் வாழ்கிறார்கள்.

முன்பின் அறிமுகமில்லாதவர்களுக்கும் உதவியைச் செய்திடு. உனக்கு எப்படி தேவைகள் இருக்கின்றனவோ, அதே போலத்தான் மற்றவர்க்கும் தேவைகள் இருக்கும். உன்னிடம் இருந்தது, இல்லாத நிலையில் உனக்கு ஒரு மகிழ்ச்சி உண்டாக்கும்.

## பழி தீர்க்கும் குணம்

பழி தீர்க்க நினைப்பதே மனிதனின் குறைபாடு – இழிவானவனுக்கும், கோழைக்கும்தான் அந்த எண்ணம் ஏற்படும்.

பிடிக்காதவர்களைக் கொடுமைபடுத்துபவன், திருட்டுக்காகக் கொலை செய்பவன், ஈனப் பிறவிகள். புண்படுத்த வேண்டும் என்று நினைப்பதே பழிதீர்க்கத் தூண்டும் கருவியாகும். அதை நினைக்கவே உயர்ந்தவர்கள் வேதனை கொள்வார்கள்.

உனக்குத் தீங்கு செய்ய நினைப்பவனைப் புறக்கணித்து விடு. அதுவே உன் அமைதிக்கு வழி. தீய உணர்ச்சிகள் பழி தீர்க்கத் தூண்டும்.

பிறருக்குக் கேடு செய்ய முனையும் முன், அவனால் விளையக்கூடிய துன்பத்தை நீயே முதலில் எண்ணிப்பார்.

என்னதான் குறிபார்த்து விட்டாலும் அம்புகள் குறித்த இடத்திற்குப் பாயும் என்ற உறுதி இல்லை. மரத்தை வெட்டுபவன் வீசிடும் கோடாறி அவன் காலிலேகூட அது படும் என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

நீ அமைதியை விரும்புவது போலவே எல்லோரும் விரும்புகின்றனர். பழி தீர்க்க நினைப்பதே தீமையை வரவழைத்துக் கொள்வதாகும். அப்படிப்பட்ட செயலில் ஈடுபடுவது இடரானது.

எதிரியைத் தாக்க நினைப்பவன் தனக்குத் தானே தீங்கு தேடிக் கொள்பவன் ஆவான். பகைவனின் ஒரு கண்ணைக் குருடாக்க நினைப்பவன், தன் இரண்டு கண்களும் இல்லாத குருடனாகி விடுவான்.

நினைத்தபடி நடக்காதபோது வருந்துகிறோம். திட்டமிட்டபடி பழி தீர்த்துக் கொண்டால், அந்த வெற்றியே துயருக்குத் தொடக்கம். சட்டத்திற்கு அஞ்சி அமைதியை இழந்து அவனும் அழிந்து போகிறான்.

எதிரியின் உயிரைப் பறிப்பதால் உனக்கு என்ன பயன்? வெறுப்பு உன்னை விட்டு அகன்று விடுமா? உனக்கு நிறைவுதான் உண்டாகுமா?

தீங்கு நினைப்பவனைத் திருத்த முயல வேண்டும். அவன் அன்பைப் பெற வழி தேடு. அதுவே நல்ல வெற்றிக்கு அடையாளம்.

கொலை செய்பவன் கோழை, செத்தவன் உயிரோடு இருந்தால்தான் வாழ முடியாதது என்று பயப்படுபவன்.

இறப்புகள் சண்டைகளை முடித்து வைப்ப தில்லை. இழந்த மதிப்பைத் தேடித் தருவதும் இல்லை. நீ செய்தது வீரத்தில் எடுத்துக்காட்டும் இல்லை.

குற்றம் செய்தவனைப் பழிதீர்த்துக் கொள் வதில் சிறப்பு ஏதுமில்லை. மன்னிப்பதனால் அடையும் சிறப்பு சிறந்தது. மனிதன் முதலில் தன்னைத்தான் வென்றிட முயல வேண்டும்.

மிகப் பெரிய தவற்றைச் செய்தவர்களை மன்னிப்பதால்தான் சிறப்பு உள்ளது. உன் குற்றம் குறைகளுக்கு நீயே அறிவுவாணன். நீயே உன் செயல்களை ஆய்ந்து சிந்தித்தால் பழி தீர்க்கும் குணமே உனக்கு ஏற்படாது. அன்பினால் உலகத்தின் மதிப்பைப் பெற்றிடுவாய்.

## கொடுமை, பகை, பொறாமை

பழிவாங்க நினைப்பது விரும்பத்தக்கதன்று. கொடுமைக் குணம் கொள்வது குறும்புதனமானது. கொடுமைச் செயல்களுக்கு வெட்கப்பட வேண்டும்.

மனிதாபிமானம் எல்லோருக்கும் இருக்க வேண்டும்.

கொடுமைகளுக்குத் தாய் அச்சம். திகைப்பை உண்டாக்குவது கொடுமை.

வீரன் தன்னை எதிர்ப்பவனைக் கண்டுதான் வாளை உயர்த்துவான். எதிரி பணிந்து விடாமல் மகிழ்கிறான். எனவே கோழைகளை எதிர்ப்பதும் உனக்கு ஈடான வல்லமை இல்லாதவனைக் கொடுமைப்படுத்துவதும் ஒழுங்கீனமானது.

சமுகத்தினர் தங்களுக்குள் போரிட்டுக் குருதி கொட்டுவதும் அச்சத்தின் காரணமாகவே. சூழ்ச்சிக்காரர்கள் கொலைகாரர்கள் திட்டத்தின் விளைவாக ஏற்படும் இந்த உள்நாட்டுப் போரில் இரண்டகங்களே மிகுதி.

கொடுமைகளைப் புரியாது, உயர்ந்தவனாக' ஒழுக்கவானனாக, மனித நலநாட்டம் கொண்டவனாக வாழ வேண்டியது மனிதனின் கடமை.

மனிதர்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒரு சாரார் தொல்லைகளை உண்டாக்குபவர். ஒரு சாரார் எதிர்ப்பு காட்டாது எதையும் தாங்கிக்கொள்பவர்கள். இதை உணர்ந்தால் கொடுமை புரிய வேண்டிய தேவை ஏற்படாது.

மனிதர் நல்லவர்களாக இருப்பதற்குத் தடை ஏதும் இல்லை. நம்மைத் தாக்கும் பொருண்மைகளை முறையிட்டுத் தீர்த்துக்கொள்ள அணுக

வேண்டும். பகை கொள்ள வேண்டியதில்லை. குறைகளைக் கேட்பவர் மனமாற்றம் கொள்வர்.

உனக்கு ஒரு நன்மை ஏற்படுவது தடுக்கப்படும் போது சீற்றம் கொள்ளாதே. நீ புத்தி கூர்மை யுடன் செயல்பட்டால் உனக்கும பெரிய நன்மை உண்டாகும்.

ஒரு மனிதன் பட்டங்களைப் பெற்று, மேலான வராக மதிக்கப்படும்போது, அவனைக் கண்டு வெறுப்பு கொள்ளாதே. அந்த நிலையை அவன் எப்படிப் பெற்றான் என்பதை நீ எண்ணிப் பார்த்துத் தெரிந்து கொள். நீ மனமாற்றம் கொள் வாய். பொறாமை அகலும்.

பட்டஙகள் எப்படிப் பெறப்படுகின்றன? அதனால் என்ன பயம்? தன்னை அடிமையாக்கிக் கொண்டால் பதவியும் பட்டமும் கிடைக்கும். எனவே, உனக்கு அப்படிப் பட்டங்களைப் பெற்று உயரும் நிலை ஏற்பட்டால் அதைப் பெரிதாகக் கருதாதே. உயர்ந்தவர்களிடம் பெறும் சலுகை களுக்கு நீ தரும் விலை அதிகமானது என்பதை மறந்து விடாதே.

நீ ஏற்றுக்கொள்ள முடியாததைப் பிறர் அடையும்போது அவர்களைக் கண்டு பொறாமை கொள்ளாதே. இதை நீ உணராவிட்டால் கொடுமை களை நீ புரிய வேண்டிய நிலை உருவாகும்.

நீ சிறப்பான நிலையை அடைந்தால் அதற் காக நீ கொடுத்த விலையை மதிப்பிட்டுப் பார். நீ ஒழுக்க சீலனாக இரு.

ஒருவனுக்கு நல்லவை ஏற்பட்டால் அவனுக்கு அதற்கான தகுதி இருக்கும்போது, நீ மகிழ வேண்டும். பிறர் மகிழ்ச்சியாக இருப்பதைக் கண்டு நீ பூரிப்பதன் மூலம் நீயும் மகிழ்ச்சி அடையலாம். தரக்குறைவாக நடக்காதே. கோழையின் செயல் களைப் புரியாதே. உன் மனசாட்சிக்குப் புறம்பாக நடக்காதே. வேதனையடையாது வாழ இதுவே வழி.

நுண்மதி இருந்தால் நீ மகிழ்ச்சியாக வாழ வழி ஏற்படும். விழிப்புணர்ச்சி இருந்தால் மனிதன் வருத்தமடையத் தேவை இல்லை. உன் செயற் பாட்டைச் சீராக அமைத்துக்கொள். மனத்தில் தீய நோக்கம் கொள்ளாது இருந்தால் உன் மன அமைதிக்கு எந்தக் கேடும் வராது.

ஊதியத்திற்காகப் பணி செய்பவன் வருந்து கிறான். சிலர் கண்ணீர் சிந்துவதும் பணத்தை எதிர்பார்த்துதான். அப்படிப்பட்டவர்கள் வருந்துவது ஏன் என்பது அவர்களுக்கே புரியாது.

எப்படி வருத்தப்படுவதற்கு ஒரு நேரம் வாய்க் கின்றதோ, அதே போல மகிழ்ச்சி அடைவதற்கும் நேரங்கள் உருவாகும்.

அழுவதால் என்ன ஆகப்போகிறது? கண்ணீர் விட்டுக் கலங்கியவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள். கண்ணீரால் கவலைத் தீயை அணைக்க முடியாது. தவற்றை ஒப்புக் கொள்பவர்கள், துன்பத்தைத் தாங்கிக் கொண்டு பொறுமையாக இருந்தவர் அமைதியும் மகிழ்ச்சியும் அடைவர்.

வருந்துவது இயற்கைக்கு முரணானது. இயற்கை மனிதனை இரக்கமுள்ளவனாகவே படைத்தது. நீ எப்போதும் நிறைவுடன் மகிழ்ச்சியாக இருக்க வேண்டும் என்றே உன்னைப் படைத்தது. ஏதும் அறியாத நிலையில் மனிதன் மகிழ்வாக இருக்கிறான்.

மனிதர் தமக்குத் துன்பம் ஏற்படும்போது மெய்ப்பொருளைக் குறைத்துப் பேசவும் முணு முணுக்கவும் செய்கிறான்.

மாற்றங்கள் இயற்கை. அதை நன்கு உணர்ந்த பிறகு நீ ஏன் அழுகிறாய்? இயற்கையின் சட்டங்களை நீ அறிந்தால் வருத்தப்பட வேண்டியது இல்லை. இயற்கைக்கு முரணாக நீயே சட்டங்களை உருவாக்கிக் கொள்வதனால் உனக்குத் தொல்லைகளும், துன்பமும் உண்டாகின்றன. இயற்கையின் சட்டங்கள் உன்னையும் பாதிக்கும்போது வருத்தப் பட்டுப் பயன் ஏதும் இல்லை. வருத்தப்படுவதால் இழந்ததைப் பெற முடியாது. மனக் கவலையை அகற்றுவதற்காக வருந்துவது, மேலும் துன்பத்தை மிகுதிப்படுத்தும். நெஞ்சத்தைத் தாக்கிய அம்பு அகற்றுவதுபோலத் தோன்றினாலும், அது அம்பை மேலும் ஆழமாகத் தைத்திடும். எனவே, கவலை கொள்ளாதே. துன்பம் நண்பர்களைப் பிரித்திடும். தனியே துணையின்றி மூலையில் முடங்கிக் கிடந்து துன்பப்பட நேரும்.

துன்பம் நேரும்போதுதான் நீ தெளிவாகவும், துணிவாகவும், விழிப்பாகவும், உறுதியாகவும்

இருக்க வேண்டும். உன்னை நீ மனிதனாகக் காட்டிக்கொள்ள வேண்டும். துன்பத்தின் காரணங் களை ஆய்ந்து களையவேண்டும்.

கண் கலங்கிக் கண்ணீர் சிந்துவது உள்ளத்தின் உயர்வான குணத்தைச் சிதைத்து விடாது. கண்ணீர் சிந்த என்ன காரணம் என்பதைச் சிந்தித்துத் தெரிந்துக்கொள். வெளிவரும் கண்ணீர் குறையும்.

எவ்வளவு கண்ணீர் சிந்துகிறார்கள் என்பது நிகழ்ந்த கேட்டின் உண்மை நிலையினைத் தெரிவிக்காது. மனிதனின் மனத்தைக் குலைப்பது கவலை. கவலையோடு இருப்பவன் உயர்ந்த செயல்களைச் செய்திட முற்படமாட்டான்.

தீயவற்றைப் புறக்கணித்து ஒதுக்கிவிடு. தீய செயல்களுக்காக உன் ஒழுக்கத்தைக் கெடுத்துக் கொள்ளாதே.

## பெருந்தன்மை

பெருந்தன்மை உள்ளத்தில்தான் உள்ளது. நல்லவனாக நடந்து கொள்வதில்தான் மதிப்பும் மரியாதையும் அடங்கியுள்ளன.

குற்றங்கள் புரிபவன் தன்னை உயர்த்திக் கொள்ளமுடியாது. மரியாதை, மதிப்பைப் பெற முடியாது. தங்கம் ஒருவனை நல்லவனாக— உயர்ந்தவனாக உயர்த்தி விடாது.

நாட்டுக்காக உழைத்த உயர்தவனுக்குப் பட்டம் பதவிகள் கிட்டும். அப்படிப்பட்டவர்களால் உலகமே நன்மை அடையும்–பெற்றோர்களின் நற்குணங்களைப் பிள்ளைகளும் அடைவார்கள். அவர்களும் மதிப்பும் மரியாதையும் அடைவார்கள். வழி வழியாக நல்ல ஒழுக்கவாளர்களாக, உயர்ந்தவர்களாக மதிப்பும் மரியாதையும் அடைய முயலவேண்டும்.

தகுதி இல்லாதவன் தன்றன் முன்னோர்களின் சிறப்பு இடத்தை அடைய நினைப்பது கள்ளத்தனமாகும்.

குருடனுக்குத் தன் பெற்றார்களைப்போலப் பார்க்க முடியவில்லையே என்று ஏங்கி என்ன பயன்? ஊமை தன்றன் மூத்தவர்களைப்போல உரையாட முடியவில்லையே என்று வருந்தி என்ன பயன்? தாழ்ந்து தரக்குறைவான நிலை அடைந்தவர்களுக்கு முன்னோர் சிறப்பு விளங்காது.

ஒழுக்கத்தை இழந்தவன் இகழப்படுவான். அவன் எந்தப் பட்டமும், பதவியும் பெற்று உயர முடியாது. உயர்ந்தாலும் நிலைக்காது. கால வெள்ளம் அடித்துச் சென்றுவிடும்.

உருவத்திற்கும் நிழலுக்கும் உள்ள தொடர்பு போல மதிப்பும் மரியாதையும் நல்லனவற்றுடன் தொடர்பு கொண்டுள்ளன. மதிப்பும் மரியாதையும் நாட்டை நடத்த எல்லோருக்கும் தேவை இல்லை. எனவே, உனக்கு எந்த பொறுப்பு கிடைக்கிறதோ

அதை நீ சரியாகச் செய்திட உறுதி கொள்ள வேண்டும். இடர்களை ஏற்றுத்தான் புகழ் பெற வேண்டும் என்று கருதாதே. சிக்கல்களை ஏற்றுத் தான் புகழ் பெற வேண்டும் என்பதில்லை.

மங்கைக்குக் கவர்ச்சிமதிப்புத் தானாக வருவது போல், நீ ஒழுக்கத்துடன் நேர்மையாக நடந்தால் பெயரும் புகழும் தாமாக வரும்.

புகைக்காக வெறி பிடித்து அலைவது வன் முறைகளுக்கு வழி வகுக்கும். நாட்டுக்காகத் துணிந்து எதையும் செய்ய ஆயத்தமாக வேண்டும். நல்ல குடிமக்களின் நலன் காப்பது 'குறிக்கோளாக இருக்க வேண்டும். ஏன் அந்த மனிதருக்குச் சிலை இல்லை என்று மக்கள் பேசிக்கொள்ள வேண்டும். உன் நடத்தை அப்படி இருக்கட்டும். உயர்வான ஆசை கொள்வது எல்லோருக்கும் இயற்கை நெஞ்சத்தில் குடி கொண்டிருப்பதே மேன்மை. உன்னை நீ நல்ல செயல்களுக்காக ஒப்படைத்துக் கொள். இரண்டகத்தார் உள்ளத்தில் பேராசை குடிகொண்டிருக்கும்.

எந்த நிலையிலும் பாம்பு நஞ்சைக் கொட்டிக் கடிக்காமல் இருக்காது. அப்படிப்பட்ட பாம்பைக் காப்பாற்றப் பால் கொடுத்தாலும் அது உன்னைச் சாகடிக்கும் போக்கைக் கை விடாது.

பெண்ணின் ஒழுக்கத்திற்கு மதிப்பளிப்பவன் மனிதன். பெண்கள் கணவனின் நன் மதிப்பை இழப்பது வேதனைக்கு உரியது.

செங்கதிர் உயர உயர நிழல் குறைகிறது. அதைப்போல ஒருவரிடம் நல்லது அதிகரிக்கும் போது பாராட்டுகளை விரும்பாது இருக்க வேண்டும். அதனால் உனக்குப் பலன் உண்டாகியே தீரும். பிறருடைய மதிப்பை நீ அடைந்தே தீருவாய்.

புகழைத் தேடி அலைபவனிடம் அது நிழல் போல் மறைய முற்படும். புகழை விரும்பாதவனின் காலடிகளைத் தேடி அந்தப் புகழ் பின் தொடரும். தகுதி இல்லாத நிலையில் அடையும் புகழ் மறைந்து விடும். புகழைத் தேடாதவனிடம் அது நீடித்து நிலை நிறுத்திக் கொள்ளும்.

## அறிவியல் கல்வி

மனிதன் எவ்வாறு நடந்து கொள்கிறான் என்பதிலிருந்து அவனைப் படைத்த இயற்கை பற்றிப் பலவும் தெரிந்துகொள்ளலாம். இயற்கையின் அறிவியல், பல வியக்கத்தக்க உண்மைகள் வெளிப்படுகின்றன. இயற்கையின் சாதனைகள் போற்றத்தக்கவை. முகில் மண்டலத்தைக் காணும் போது நமக்கே பல சிந்தனைகள் தோன்றுகின்றன.

செங்கதிர், இருக்குமிடத்தில் இருந்துகொண்டு பலவற்றை இயக்குகிறது. நிலத்தில் வகை வகையான பொருள்கள் விளைகின்றன. அவை அழகுடையதாவும் இருக்கின்றன. பயனுள்ளதாகவும் இருக்கின்றன. விலங்குகளுக்கு வேண்டிய தீனியும்

விளைகிறது. மனிதர்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களும் விளைகின்றன. எல்லோருமே உண்டு களித்து வாழ்கிறார்கள். ஒன்று மற்றொன்றிற்கு உதவி புரிகிறது. எங்கும் இன்பம் நிலவுகிறது.

இயற்கையின் அருஞ்சிறப்பு அறிவியல் அறிவு கொண்டவர்களுக்குப் புரியாமல் இருக்க வழியில்லை. இயற்கையை வணங்குவதும் கடமையாகும்.

வாழ்வதா இறப்பதா—அதிகாரம் செலுத்துவதா, பணிவதா—செயல்படுவதா, சோம்பிக் கவலைப்படுவதா என்பதை நீயே சிந்தித்து முடிவு கொள்ள வேண்டும். நீ பெற்ற அறிவை உன் நன்மைக்குப் பயன்படுத்து. மேலும், அறிவு பெற்று, நல்லவனாக, சான்றோனாக வாழ முற்படு.

## வளமையும் வறுமையும்

அளவிற்கு மீறிய வளத்தைப் பெற்றிட ஆசைப்படாதே. உனக்குப் போதிய வளம் காண முடியவில்லை என்றால் மனவேதனை அடையாதே.

முன்னேற்றத்தைக் கண்டு இகழக் கூடாது. எதுவும் நிலைத்து இருக்கும் என்று நம்பிக்கை கொள்ளாதே. எந்த நிலையிலும் பொறுமையைக் கடைபிடித்து வாழக் கற்றுக்கொள்.

வறுமையின் தாக்கத்தைத் தாங்குவது கடின மானதுதான். இருப்பினும் பொறுமைக்குச் சிந்தனையுடன் கூடிய அறிவுடன் செயல்படு.

நல்லதும் கெட்டதும் உனக்குச் சோதனை கள். எனவே, எந்த நிலையிலும் கவனமாக இரு.

முன்னேற்றம் உனக்கு ஊக்கத்தையும் மன மகிழ்ச்சியையும் தருகிறது. அதே நேரத்தில் நீ பெற்ற வளம் உன் விரைவையும், உணர்ச்சி யையும், பலத்தையும் செயல்படாத நிலைக்கு ஆளாக்கி விடுகிறது.

வறுமை உன்னை ஆட்கொண்டு விட்டால் கூட நீ கவலைப்படாதே. அதுவும் நிலைத்து இருப்பதில்லை. மீண்டும் நீ உன் ஆற்றலைக் கொண்டு அதனை அழித்து முன்னேறலாம். வறுமையில் வாழும் மனிதன் தன்னை எல்லோரும் கை விட்டுவிட்டதாக நினைக்கிறான். தன் மனத் தில் தோன்றிய ஆசைகள் நிறைவேறவில்லையே என்று ஏக்கமடைகிறான். உறுதி கொண்டு இன்னல்களை எதிர்த்துப் போரிடுகிறான். அவனிட மிருந்து துன்பமும் தொல்லையும் அகன்றுவிடு கின்றது.

செல்வத்துடன் வளமாக வாழ்பவன், நிறை வுடன் இருப்பதாக மகிழ்கிறான். பலர் அவனைப் பாராட்டுவதைக் கண்டு மகிழ்கிறான். அவனிடம் நல் அறிவும் மறைகிறது. தனக்கு எதிர் காலத்தில்

வரக்கூடிய இடர்களை அவன் சிந்திப்பதில்லை. பலரை நம்புகிறான். ஏமாற்றம் உண்டாகி வளத்தை இழக்கிறான். வளமாக இருக்கும்போது உண்மை எதுவும் புலப்படுவதில்லை.

வேதனையோடு மனிதனுக்கு மன நிறைவு இருந்தால் போதுமானது. இன்பம் மனிதனைப் பல கவலைகளில் திணித்து திண்டாட வைக்கிறது.

எனவே, நீ உன் வாழ்நாள் முழுவதும் எப்போதும் நேர்மையுடன் நடந்துக்கொள். மாற்றங்களைக் கண்டு கலங்கிடாதே. எது நேர்ந்தாலும் உனக்கு எல்லோருடைய மதிப்பும் மரியாதையும் நீடித்து இருக்கும். அறிவாளி எந்த நிலையையும் தனக்கு ஆதரவாகப் பயன்படுத்திக் கொள்வான். நல்லனவற்றைக் கட்டுக்குள் வைத்திருப்பான். தீமைகளை விரட்டி வெற்றியைக் காணுவான்.

முன்னேறிய நிலையில் ஊகங்களில் ஈடுபடாமலும், வறுமையில் சோர்ந்து விடாமலும் இருந்தால் தொல்லைகள் ஏதும் வராது. உன்னோடு நிலைத்து இருக்க முடியாதவற்றைந் தேடிக் கொள்ள ஆசைப்படாதே. வறுமையிலும் நம்பிக்கையை இழக்காதே. வழியில் குழி வெட்டப் பட்டிருக்கிறது என்பதை உணராதவன் அதே குழியில் விழுந்தழிவான்.

மலை மீதிருந்து பாய்ந்து வரும் நீர் நெடுகப் பல நல்ல காரியங்களைச் செய்துவிட்டு கடலில்

தான் சேரும். வழியில் எங்கும் ஒரே இடத்தில் தங்கி இருப்பதில்லை. வளமும் முன்னேற்றமும் அப்படிதான். அது காற்றைப் போன்றது. வரும், வீசும், மறையும்.

மனித உடலையும், உணர்வுகளையும் பிணி பாதிக்கும். வேதனையும் மிகுதியான தொல்லை தருவதாகும். இயற்கையாகவே அதைப் போக்கிக் கொள்ள சில வழிகள் உள்ளன. அமைதியை இழக்கும்போது தன்னம்பிக்கையுடன் செயல்படு.

துன்புற வைப்பது இயற்கையின் உரிமை. உனக்கு மட்டும் இல்லை உலகில் யார்க்கும் இந்த நிலை ஏற்பட்டு விட்டதே என்று கவலைப்படு. அப்படிக் கவலை கொள்வதுதான் உன் நெஞ்சத்தைச் சீர்ப்படுத்தும்.

இப் பிறவியில் தெரிந்து கொள்ள வேண்டியதைத் தெரிந்துகொண்டு, இயற்கையின் சட்டங்களுக்கு மதிப்புக் கொடுத்து செயல்படு. உனக்கு மட்டும் எதுவும் நேரக் கூடாது என்று நினைப்பது பேதமை. உலகக் குடும்பத்துள் நீயும் ஒருவன்.

